8-3

உ

சிவமயம்.

# தோத்திர மஞ்சரி.

திருப்பேரூர்

சாந்தலிங்க சுவாமிகள்

அருளிய

## வைராக்கிய சதகத் தோத்திரம்

மூலமும்,






ஸ்ரீ கோவிலூர்

சங்கரானந்த சுவாமிகள்

இயற்றிய உரையும்.




உ

சிவமயம்.

# தோத்திர மஞ்சரி.

திருப்பேரூர்

சாந்தலிங்க சுவாமிகள்

அருளிய

## வைராக்கிய சதகத் தோத்திரம்

மூலமும்,

ஸ்ரீகோவிலூர்

சங்கரானந்த சுவாமிகள்

இயற்றிய உரையும்.

இஃது

தருமபுரியைச்சார்ந்த குமாரசாமிப்பேட்டை

ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி சுவாமி மடாலய

வேதாந்த சபையாராலும்,

வேலூர்-வேங்கட வேதாந்த சபையாராலும்,

பதிப்பிக்கப்பெற்றது.

 1929. [விலை அணா 8.



ஸ்ரீமத் சங்கரானந்த சுவாமிகள்

உ

சிவமயம்

# மு க வு ரை.



முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான், உயிர்கள் முத்தி யின்ப மெய்தற்பொருட்டு மானிடசரீரத்தை யுதவியுள்ளார். ஆனல் ஜீவர்கள் அனுதி வாசனுபலத்தினல் உலகம் மெய் யென்றும், மனைவி மக்களைக் காப்பாற்றி அவர்களுடன் விட யங்களை நுகர்வதே புருடார்த்தமென்று மெண்ணி, அவற்றிற் காகப் பொருளீட்டுவதிலேயே வாணுட்கழிக்கின்றனர். ஆண் டவன் திருவருளையடைந்துய்ய வேண்டுமென்று நினைப்பவர் இவ்வுலகில் மிகச்சிலரே.

பலரும் முத்தியின்பம் மேலானதென்றும் அதை யனுப விக்கவேண்டுமென்றுங் கருதுகின்றனர். அவ்வின்பத்தைப் பெற நேரிய சாதனம், இறைவரிடத்தும், அவரடியார்களிடத் தும் மெய்யன்பு பூண்டொழுகுவதேயாம். எம்பெருமானி டத்து மெய்யன்பில்லாதார் எனைத்து நூல் கற்பினும் முத்திக் கருகராகார். அவ்வன்பு இறைவன் புகழ்ச்சியைப் போற்று னர்க்கன்றி ஏனையோர்க் குண்டாகாது.

'இருள்சேரிரு வினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு'

இறைவனது உண்மைப்புகழையே எப்போதும் பேசுப வரிடத்து மயக்கத்தைப்பற்றி வருகின்ற இருவினைகளும்

சேரா என்று தமிழ்மறை கூறுகின்றது. ஆகவே அவர் புகழைச் சொல்வதனுல் உயிர்களுக்கு மிகவும் மேன்மையுண்டாமென்பது அனைவர்க்குந் தெள்ளிதில் விளங்கத்தக்கது.

இத்தமிழ்நாடியற்றிய தவப்பயனுகை அத்தகையபுகழ், மெய்யன்பு நிறைந்த நந் தமிழ்நாட்டில் பல்லாண்டுகட்குமுன் அவதாரபுருடர்களாய்த் தோன்றிய சில பெரியோர்களியற்றியுள்ள பாமாலைகளில் செறிந்து கிடக்கின்றது. நால்வராதி பெரியோர்கள் திருவாய்மலர்ந்தருளிய பக்தி ஞான வைராக்கியம் நிரம்பிய பாசுரங்கள் தமிழ்மக்களுக்கு ஒரு வைப்பென்றே கூறலாம். ஆகையால் அவ்வகையான பாடல்களில் சிலவற்றைத் திரட்டி இந்நூல் இயற்றியிருக்கின்றேன். மனிதர்கள் பல்வேறு தெய்வங்களையாராதிக்கு மியல்புடையவர்களாதலின் அவரவர்க்கிஷ்டமான தெய்வங்களின் திருவுருவப்படங்களும் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. முத்தியில் விருப்பமுடையோர் இப்பாசுரங்களால் ஈசனை வழிபடின் மிகுந்த பலனை யடைவார்களென் றெண்ணுகின்றேன்.

திருப்பேரூர் ஸ்ரீமத் சாந்தலிங்கசுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய 'வைராக்கிய சதகம்' என்கின்றநூல், தருமபுரியைச்சார்ந்த குமாரசாமிப்பேட்டை ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி சுவாமி மடத்தில் சில மாதங்களுக்கு முந்தி பாடம் நடந்தபோது, ஒருவரும் உரையியற்றுத அந்நூலின் பிற்பகுதியான தோத்திரத்திற்குத் தமியேன் ஒருரை யியற்றினேன். பாடம் முடிந்ததும் சில அன்பர்கள் அதை அச்சிட வேண்டுமென்று விரும்பினர். அஃதுடன் ஆன்றோர்களருளிச்செய்த சில தோத்திரப்பாக்களையுஞ் சேர்த்து 'தோத்திரமஞ்சரி' எனும் பேரிட்டு அச்சிடலுற்றேன்.



எனது நண்பரும், திருச்செங்கோடு, உயர்தரப் பாடசாலைத் தமிழாசிரியருமாகிய ஸ்ரீமான் மா. நீலகண்டம் பிள்ளை அவர்கள் ஷ உரையை நன்கு ஆய்ந்து பரிசோதித்துத் தந்ததற்கு யான் அவருக்கு எனது மனமார்ந்த நன்றி செலுத்துகின்றேன்.

எனது வேண்டுகோளின்படி ஷ உரைக்கு ஒரு சிறப்புப்பாயிரம் எழுதியுதவியும், மற்றிடங்களில் போதுமான திருத்தங்கள் செய்தும் உபகரித்த தருமபுரி உயர்தரப் பாடசாலைத் தமிழ்ப்புலவர் சுகவனம் சிவப்பிரகாசம் பிள்ளை அவர்களின் அன்பு என்றும் மறக்கற்பாலதன்று.

குமாரசாமிப்பேட்டை போர்டு எலிமெண்டரி பாடசாலைத் தலைமையாசிரியரும், ஷ மடத்தில் 2-ம் பாடம் நடாத்துகின்றவருமான ஸ்ரீமான் கு. ஆறுமுக முதலியாரவர்கள் யான் எழுதிய உரைகளையும், திரட்டிய பாடல்களையும் செவ்வனே பெயர்த்து எழுதியும், அச்சுப்பிழை முதலியனவில்லாமல் பரிசோதித்தும் வந்ததற்கு மிகவும் நன்றி செலுத்துகின்றேன்.

இப்புத்தகம் வெளியிடுவதற்குப் பொருளுதவி செய்த ஷ மடாலய சங்கத்தார்க்கும், வேலூர் வேங்கட வேதாந்த சபைப் போதகாசிரியர் ஸ்ரீமத் சு. திருவேங்கடானந்தா அவர்கட்கும் எனதுநன்றி உரித்தாக. இதனுல் வரும் ஊதியத்தை ஷ மடத்தில் வருடந்தோறும் நடாத்துகின்ற சங்கர ஜயந்தி மகோற்சவத்திற்கு ஒரு மூலதனமாக வைக்கப்படும். ஆகவே இப்புத்தகம் வாங்குவோர் அவ்வரிய கைங்கரியத்திற்

குப் பொருளுதவி செய்ததனுலுண்டாகும் அறப்பயனையும் அடைவார்கள். உயிரியற்கையான பிழைகளுளதேல் உயர்ந்தோர் பொறுக்க.

குமாரசாமிப்பேட்டை
தர்மபுரி. 22-4-29 } சங்கரானந்தம்.

---

இப்புத்தகம் அடியிற்கண்ட விலாசத்திற் கிடைக்கும்:—

K. ஆறுமுக முதலியார்,
ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி சுவாமி மடம்,
குமாரசாமிப்பேட்டை,
தர்மபுரி போஸ்டு,
(சேலம் ஜில்லா.)

உ

# தோத்திர மஞ்சரி அட்டவணை



---

உ

சிவமயம்.

# தோத்திர மஞ்சரி.



## 1. விநாயகப்பத்து.

திருஞானசம்பந்த சுவாமிகள்

திருவலிவலம்-பண்-வியாழக்குறிஞ்சி

பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே. 1

ஐந்துகரத்தனை ஆனைமுகத்தனை
யிந்தினிளம்பிறை போலுமெயிற்றனை
நந்திமகன்றனை ஞானக்கொழுந்தினை
புந்தியில்வைத்தடி போற்றுகின்றேனே. 2

அல்லல்போம் வல்வினைபோம் அன்னைவயிற் றிற்பிறந்த
தொல்லைபோம் போகாத் துயரம்போம்—நல்ல
குணமதிகமா மருணைக் கோபுரத்தின் மேவும்
கணபதியைக் கைதொழுதக் கால். 3

இன்பமாய தருதிடை யோங்கவும்
துன்பமாயது தூரத்து ணீங்கவும்
முன்பராபரன் மொய்குழ லோடணைந்
தன்பினீன்றவோ ராணையைப் போற்றுவாம். 4

வாக்குண்டா நல்ல மனமுண்டா மாமலராள்
நோக்குண்டா மேனி நுடங்காது—பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கையான் பாதந்
தப்பாமற் சார்வார் தமக்கு. 5

மண்ணுல கத்தினிற் பிறவி மாசற
வெண்ணிய பொருளெலா மெளிதில் முற்றுறக்
கண்ணுத லுடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம். 6

சுரகுலாதிபன் றாய்மலர் நந்தனம்
பெருகவார் கடற்பெய்த வயிற்றினேன்
கரகநீரைக் கவிழ்த்த மதகரி
சரணநாளுந் தலைக்கணி யாக்குவாம். 7



மோகமெனுங் கடல்கடந்து முத்தியெனுங்
கரைகாண்பான் முதிர்ந்த நாலாம்
பாகமெனு மலர்கொண்டு பத்தியெனும்
புனலாட்டிப் பரிந்து சாற்றிச்
சோகமெனப் பாவித்துத் துரியமெனும்
விளக்கேற்றிச் சோக நீங்கி
ஆகமெனுங் கோயிலின்கண் ணறிவென்னுங்
கணபதிக்கே யன்பு செய்வாம். 8

அகரமென வறிவாகி யுலகமெங்கு
மமர்ந்த அகரவுகர மகரங்கடம்மாற்
பகருமொரு முதலாகி வேறுமாகிப்
பலவேறு திருமேனி தரித்துக்கொண்டு
புகரில்பொரு ளுன்கினையு மிடர்தீர்ந்தெய்தப்
போற்றுநருக் கறக்கருணை புரிந்தல்லார்க்கு
நிகரின்மறக் கருணைபுரிந் தாண்டுகொள்ளு
நிருமலனைக் கணபதியை நினைந்துவாழ்வாம். 9.

அருணகிரிநாதர்—(திருப்புகழ்)

கைத்தல நிறைகனி அப்பமொடவல் பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணிக்
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ
கற்பகமென வினை கடிதேகும்
மத்தமு மதியமும் வைத்திடு மரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை யுத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே.

முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட வெழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த வச்சிவ னுறைரத
மச்சது பொடிசெய்த வதிதீரா
அத்துயரது கொடு சுப்பிரமணி படு
மப்புன மதனிடை யிபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.

விநாயகப்பத்து முற்றிற்று.

---



## 2. முருகப்பத்து.

திருக்கோழம்பம்—பண்—திருக்குறுந்தொகை.

சமர சூரபன் மாவைத் தடிந்தவேற்
குமரன் றுதை நற்கோழம்ப மேவிய
அமரர்கோவினுக் கன்புடைத் தொண்டர்கள்
அமரலோகம தாளுடை யார்களே. 1

உன்னையொழிய வொருவரையு நம்புகிலேன்
பின்னை யொருவரையான் பின்செல்லேன்—பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தி வாழ்வே. 2



மூவிரு முகங்கள்போற்றி முகம்பொழி கருணைபோற்றி
யேவருந் துதிக்கநின்ற வீராறுதோள்போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ்செவ்வேள் மலரடிபோற்றி யன்னான்
சேவலும் மயிலும்போற்றித் திருக்கைவேல் போற்றிபோற்றி.

முருகாவெனவுனை யோதுந்தவத்தினர் மூதுலகில்
அருகாதசெல்வ மடைவர் வியாதியடைந்து நையார்
ஒருகாலமுந் துன்பமெய்தார் பரகதியுற்றிடுவார்
பொருகால நாடுபுகார் சமராபுரிப் புண்ணியனே. 4

ஒருமையுடனினது திரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்த முறவு வேண்டும்
உள்ளொன்றுவைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவு கலவாமை வேண்டும்
பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண்டும் பொய்மை
பேசாதிருக்க வேண்டும்
பெருநெறி பிடித்தொழுகவேண்டு மதமானபேய்
பிடியாதிருக்க வேண்டும்
மருவுபெண்ணாசையை மறக்கவே வேண்டுமுனை
மறவாதிருக்க வேண்டும்
மதிவேண்டு நின்கருணை நிதிவேண்டு நோயற்ற
வாழ்வினான் வாழவேண்டும்
தருமமிகு சென்னையிற் கந்தகோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத்துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. 5

எந்தைநினை வாழ்த்தாத பேயர்வாய் கூழுக்கு
மேக்கற்றிருக்கும் வெறுவாய்
எங்கள் பெருமானுனை வணங்காத மூடர்தலை
யிகழ்விற கெடுக்குந்தலை
கந்தமிகு நின்மேனி காணாத கயவர்கண்
கலநீர் சொரிந்த வழுகண்
கடவுணின் புகழ்தனைக் கேளாத வீணர்செவி
கைத்திழிவு கேட்குஞ் செவி
பந்தமற நினையெணாப் பாவிகட நெஞ்சம்
பகீரென நடுங்கு நெஞ்சம்
பரமநின் திருமுன்னர் குவியாத வஞ்சர்கை
பலியேற்க நீள்கொடுங்கை
சந்தமிகு சென்னையிற் கந்தகோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 6

---

அருணகிரிநாதர்—(திருப்புகழ்)

ஏறுமயிலேறிவிளை யாடுமுக மொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுக மொன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதியருணாசல மமர்ந்த பெருமாளே. 7



நாதவிந்து கலாதீ நமோ நம
வேதமந்த்ர சொரூபா நமோநம
ஞானபண்டித சாமீ நமோநம வெகுகோடி

நாமசம்பு குமாரா நமோநம
போக அந்தரி பாலா நமோநம
நாகபந்த மயூரா நமோநம பரசூரர்

சேததண்ட விநோதா நமோநம
கீதகிண்கிணி பாதா நமோநம
தீரசம்ப்ரம வீரா நமோநம கிரிராஜ

தீபமங்கள ஜோதீ நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவகுஞ்சரி பாகா நமோநம அருள்தாராய்

ஈதலும்பல கோலால பூஜையும்
ஓதலுங்குண வாசார நீதியும்
ஈரமுங்குரு சீபாத சேவையு மறவாத

ஏழ்தலம்புகழ் காவேரியால் விளை
சோழமண்டல மீதே மனோகர
ராஜகெம்பிர நாடாளு நாயக வயலூரா

ஆதரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடே முநாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி லையிலேகி

ஆதியந்தவு லாவாசு பாடிய
சேரர்கொங்குவை காவூர் நனாடதில்
ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே 8

பாதிமதிநதி போதுமணிசடை நாதனருளிய குமரேசா
பாகுகனிமொழி மாதுகுறமகள் பாதம்வருடிய மணவாளா
காதுமொருவிழி காகமுறவருள் மாயனரிதிரு மருகோனே
காலனெனையணுகாமலுனதிரு காலில்வழிபட வருள்வாயே
ஆதியயனொடு தேவர்சுரருல காளும்வகையுறு சிறைமீளா
ஆடுமயிலினி லேறியமரர்கள் சூழவரவரும் இளையோனே
சூதமிகவளர் சோலைமருவுசு வாமிமலைதனில் உறைவோனே
சூரனுடலற வாரிசுவறிட வேலைவிடவல பெருமாளே. 9

இருந்தவீடுங் கொஞ்சிய சிறுவரும் உறுகேளும்
இசைந்தவூரும் பெண்டிரு மிளமையும் வளமேவும்
விரிந்தநாடுங் குன்றமு நிலையென மகிழாதே
விளங்குதீபங் கொண்டுனை வழிபட அருள்வாயே
குருந்திலேறுங் கொண்டலின் வடிவினன் மருகோனே
குரங்குலாவுங் குன்றுறை குறமகள் மணவாளா
திருந்தவேதந் தண்டமிழ் தெரிதரு புலவோனே
சிவந்தகாலுந் தண்டையு மழகிய பெருமாளே. 10

---

பூவே மணமே சரணஞ் சரணம்
பொருளே யருளே சரணஞ் சரணங்
கோவே குகனே சரணஞ் சரணங்
குருவே திருவே சரணஞ் சரணந்
தேவே தெளிவே சரணஞ் சரணஞ்
சிவசண்முகனே சரணஞ் சரணங்
காவேர் தருவே சரணஞ் சரணங்
கந்தா சரணஞ் சரணஞ் சரணம்.

முருகப்பத்து முற்றிற்று.

---



## 3. நடராஜப்பத்து.

உலகெலா முணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம். 1

வேதமும் விளம்பற்கரும் விமலன் மெய்
சீதகங்கைத் திகழ் பிறைச் சென்னியான்
கோதகன்ற குமாரப் புரிவளர்
நாதனும் நடராஜனைப் போற்றுவாம். 2

காரணமான தன் கலையினோர் கலை
தாரணி தனிலுறுந் தலங்கள் மேவிவந்
தாரண வுரைப்படி யடங்கு மம்பலப்
பூரண நடேசனைப் போற்றல் செய்குவாம். 3

ஆதியாய் நடுவுமாகி யளவிலா வளவுமாகிச்
சோதியா யுணர்வுமாகித் தோன்றிய பொருளுமாகிப்
பேதியா வேகமாகிப் பெண்ணுமா யாணுமாகிப்
போதியா நிற்குந்தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி. 4

கற்பனை கடந்தஜோதி கருணையே யுருவமாகி
அற்புதக் கோலநீடி யருமறைச் சிரத்தின்மேலாஞ்
சிற்பர வியோமமாகுந் திருச்சிற்றம் பலத்துணின்று
பொற்புட னடஞ்செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி. 5

பராபர முதலேபோற்றி பத்தியில் விளைவாய் போற்றி
சராசர மாகிவேறாய்நின்ற தற்பரனே போற்றி
கராசல வுரியாய்போற்றி கனகவம் பலத்துளாடும்
நிராமய பரமானந்த நிருத்தனே போற்றிபோற்றி. 6

கல்லார்க்குங் கற்றவர்க்குங் களிப்பருளுங் களிப்பே
காணார்க்குங் கண்டவர்க்குங் கண்ணளிக்குங் கண்ணே
வல்லார்க்கு மாட்டார்க்கும் வரமளிக்கும் வரமே
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும் மதியே
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே
நரர்களுக்குஞ் சுரர்களுக்கும் நலங்கொடுக்கும் நலமே
எல்லார்க்கும் பொதுவில்நட மிடுகின்ற சிவமே
யென்னரசே யான்புகலு மிசையுமணிந் தருளே. 7

அருள்விளக்கே யருட்சுடரே யருட்சோதிச் சிவமே
யருளமுதே யருணிறைவே யருள்வடிவப் பொருளே
இருள்கடிந்தென் னுளமுழுது மிடங்கொண்ட பதியே
என்னறிவே யென்னுயிரே யெனக்கினிய வுறவே
மருள்கடிந்த மாமணியே மாற்றறியாப் பொன்னே
மன்றில் நடம்புரிகின்ற மணவாளா வெனக்கே
தெருளளித்த திருவாளா ஞான வுருவாளா
தெய்வ நடத்தரசே நான்செய்மொழி யேற்றருளே. 8

அருட்சோதித் தெய்வ மெனையாண்டுகொண்ட தெய்வம்
அம்பலத்தே யாடுகின்ற வானந்தத் தெய்வம்
பொருட்சாரு மறைகளெலாம் போற்றுகின்ற தெய்வம்
போதாந்தத் தெய்வமுயர் நாதாந்தத் தெய்வம்



இருட்பாடு நீக்கியொளி யீந்தருளுந் தெய்வம்
எண்ணிய நானெண்ணியவா றெனக்கருளுந் தெய்வந்
தெருட்பாட லுவந்தெனையுஞ் சிவமாக்குந் தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம். 9

கதிக்கு வழிகாட்டுகின்ற கண்ணே யென் கண்ணிற்
கலந்த மணியே மணியிற்கலந்த கதிரொளியே
விதிக்குமுல குயிர்க்குயிராய் விளங்குகின்ற சிவமே
மெய்யுணர்ந்தோர் கையகத்தே விளங்கிய தீங்கனியே
மதிக்குமதிக் கப்புறம்போய் வயங்குதனி நிலையே
மறைமுடி யாகமமுடிமேல் வயங்குமின்ப நிறைவே
துதிக்குமன்பர் தொழப்பொதுவில் நடம்புரியு மரசே
சொன்மாலை சூட்டுகின்றேன் றோளி லணிந்தருளே. 10

நாமாவலி.

அம்பலத்தரசே யருமருந்தே-யானந்தத்தேனே யருள்விருந்தே
பொதுநடத்தரசே புண்ணியனே-புலவரெலாம்புகழ் கண்ணியனே
சிவசிவசிவ சின்மயதேஜா-சிவசுந்தரகுஞ்சித நடராஜா
மலைதருமகளே மடமயிலே-மதிமுகவமுதே யிளங்குயிலே
ஆனந்தக்கொடியே யிளம்பிடியே-யற்புதத்தேனே மலைமானே
படனவிவேக பரம்பரவேதா-நடனசபேச சிதம்பரநாதா
அரிபிரமாதியர் தேடியநாதா-அரகரசிவசிவ ஆடியபாதா
சங்கரசிவசிவ மாதேவா-எங்களையாட்கொள வாவாவா
அரகரசிவசிவ மாதேவா-அருளமுதந்தா வாவாவா.

திருச்சிற்றம்பலம்.

நடராஜப்பத்து முற்றிற்று.

---



## 4. திருமால் தோத்திரம்.

காப்பு - (பெரியாழ்வார்)

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பல்கோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா வுன்
சேவடி செவ்வி திருக்காப்பு.

---

(ஸ்ரீமத் சங்கரானந்த சுவாமிகள் இயற்றியது)

## திருமால் போற்றித் திருவகவல்.

நிலைமண்டில வாசிரியப்பா.

நாராயணாய - நமவென் றுரைத்து
பேராப் பிறப்பை - பெயர்த்தடி சார்ந்து
இறுமாந் திருக்க - வின்னருள் புரியாய்
கார்நிற மொத்த - கரியமே னியனே
வார்கடல் தன்னில் - வளப்பமாய் வாழும்
நீறணிந் தோனே - நிருமலா நித்தா



பன்னக சயனா - வென்னையாண் டவனே
அன்னையொத் தோனே - யரும்பெரும்பொருளே
நிகமங்கள் காணா - நின்னடிவாழ்க
பகலவன்முதலாய் - பற்பலதேவரும்
அகமகிழ்ந்தேத்தும் - அண்ணலேபோற்றி
பாராய்மன்னிய - பரமனேபோற்றி
நீராய்த்தோன்றிய - நிருமலாபோற்றி
எரியாய்மிளிர்ந்த - எந்தாய்போற்றி
வளியாய்மேவிய - வள்ளலேபோற்றி
விசும்பாய்நின்ற - விமலாபோற்றி
பருதியாய்விரிந்த - பராபராபோற்றி
நிலவாய்நிகழ்ந்த - நித்தாபோற்றி
உயிராய்நிறைந்த - உக்கிராபோற்றி
மலையாய்விளங்கிய - மாலேபோற்றி
அலையாய்விரிந்த - வத்தாபோற்றி
அயனைத்தோன்றிய - வையாபோற்றி
சிவனைவிளங்கிய - சித்தாபோற்றி
குருவாய்வந்த - வருவாபோற்றி
கட்புலனின்றி - காண்போய்போற்றி
காதில்லாமல் - கேட்போய்போற்றி
மூக்கில்லாமல் - முகருவோய்போற்றி
நாவில்லாமல் - நக்குவோய்போற்றி
தோலில்லாமல் - தொடுவோய்போற்றி
மதியில்லாமல் - மதிப்போய்போற்றி
வாளால்வெட்ட - வராதோய்போற்றி
நீரால்நனைக்க - நனையாய்போற்றி

எரியாலெரிக்க - வெரியாய்போற்றி
காலாலுலர்த்த - வுலராய்போற்றி
கீழேழுலக - மானாய்போற்றி
மேலேழுலக - மெடுத்தாய்போற்றி
பத்துத்திசையும் - பரந்தாய்போற்றி
பற்பலதேவரு - மானாய்போற்றி
சகமெலாங்காக்க - சனித்தாய்போற்றி
தேவகிதனயா - தேவதேவேசா

கமலாநாதா - கார்முகில்வண்ணா
நந்தநந்தனா - நளினலோசனா
பூதனாஹரணா - பாதகநாசனா
தேனுகமர்த்தனா - வானந்தவடிவே
பால்வெண்ணெயுண்ட - பரம்பரம்பொருளே
லீலாமானுடா - காளியமர்த்தனா
காலிகள்மேய்த்த - கரையிலாப்பொருளே
கோபபாலகா - கோபிகாநாதா
காமஜனகா - வாமனவடிவே
சிசுபாலாந்தகா - சிசுகோபவேஷா

கம்ஸநாசனா - கருடவாகனா
நூற்றுவர்கூற்று - நுண்ணியபொருளே
அகிலநாயகா - வக்ரூரவரதா
மதுராநாதா - மங்கலரூபா
விதுராமித்திரா - விழுமியபொருளே
நாலுகையோனே - நான்மறைவடிவே
தேரிலமர்ந்து - தெருளுறுஞானம்
பார்பரித்தோனுக் - கருளியநாதா



பத்தர்தாபம் - பரக்கவறுக்கும்
உத்தமபுருஷா - வித்தகாபோற்றி

மூவுலகளந்த - முதல்வாபோற்றி
மூவருமான - வொருவாபோற்றி
அனந்தபுரத்தி - லழகனேபோற்றி
வர்க்கலைமேவும் - சனார்த்தனாபோற்றி
அம்பலத்தமரும் - வம்பனேபோற்றி
ஆயூருறையும் - நாயகாபோற்றி
வேலியில்வாழும் - விமலாபோற்றி
வைகுண்டத்தமர் - விண்டுவேபோற்றி
மதுரைவாழும் - மங்கலாபோற்றி
பூவணத்தமரும் - புண்ணியாபோற்றி

கானப்பேரு - ரண்ணலேபோற்றி
ஸ்ரீரங்கத்துறை - ரங்காபோற்றி
தாஞ்சூர்மேய - தயாநிதேபோற்றி
காஞ்சிமருவும் - வரதாபோற்றி
கோவலூர்மேவிய - கோவேபோற்றி
தில்லைமன்னிய - திலகாபோற்றி
சென்னையில் வாழும் - மன்னவாபோற்றி
திருப்பதிமேவிய - திருத்தாபோற்றி
அலமேல் மன்னிய - அப்பாபோற்றி
திருத்தணிமேவிய - திருவேபோற்றி

புரியிலுறையும் - பூரணாபோற்றி
பண்டரிமேவிய - பராத்பராபோற்றி
குமாரபுரியில் - கொழுநனேபோற்றி
மெய்யும்பொய்யு - மானாய்போற்றி

மையலறுத்த - மாதவாபோற்றி
வெய்யபிறப்பை - யறுப்பாய்போற்றி
எல்லாமாகிய - வல்லவாபோற்றி
அல்லலறுக்குஞ் - செல்வாபோற்றி
பல்லுயிர்காக்கும் - நல்லவாபோற்றி
நினைப்பவர்துன்ப - மனிப்போய்போற்றி

வினைப்பயனூட்டும் - விநாயகாபோற்றி
நினைக்க நினைக்க - வினிப்போய்போற்றி
பிறப்புமிறப்பு - மறுப்போய்போற்றி
அறப்பயனளிக்கு - முறவேபோற்றி
இருள்கெடவருளும் - இறைவாபோற்றி
அருளிடவேண்டு - மப்பாபோற்றி
மனக்கோதறுக்கு - மல்லாபோற்றி
எனக்காய்வந்த - வெந்தாய்போற்றி
அஞ்சேலென்று - அருள்வாய்போற்றி
விஞ்சையெனக்கு - விளக்காய்போற்றி
துரியங்கடந்த - தூயாபோற்றி
பேராயிரமுடை - பெம்மான்போற்றி
அலைகடல்துயிலும் - அமலாபோற்றி
அடிமுடியற்ற - வகண்டாபோற்றி
படிமிசைதோன்றிய - பத்தாபோற்றி
அரும்பிறப்பளித்த - வருவாபோற்றி
வேணுதரித்த - விண்ணவாபோற்றி
ஐயாபோற்றி - வத்தாபோற்றி
துய்யாபோற்றி - சுடரேபோற்றி
பொன்னேபோற்றி - மணியேபோற்றி



அரசேபோற்றி - யமுதேபோற்றி
அறிவேபோற்றி - நிறைவேபோற்றி
போற்றிபோற்றி - புண்ணியாபோற்றி
போற்றிபோற்றி - புராணாபோற்றி
போற்றிபோற்றி - சயசயபோற்றி.

திருமால் போற்றித் திருவகவல் முற்றிற்று.

பொன்னும் வேண்டிலேன் புகழும் வேண்டிலேன்
பொலிவு மிக்கதோ ரிடமும் வேண்டிலேன்
மன்னு சாத்திரப் பொருளும் வேண்டிலேன்
மயக்கமான பல் சமயம் வேண்டிலேன்
நல்ல வாடைக ளடிசில் வேண்டிலேன்
நாற்றமிக்க வில் வாக்கை வேண்டிலேன்
மல்ல மர்த்தனு மல ரடியிலே
மருவ வேண்டுமென் மதி நிரந்தரம்.

கமலநாயகனே கண்ணா கார்முகில் வண்ணாவென்றும்
விமலனே விசுவரூபா விண்டுவே விட்டலேசா
அமலனே யனங்கதாதா வனகவென் றரற்றியிந்த
அம்லமாம் பிறப்பறுக்க வருளுவா யமரரேறே. 1

பச்சைமா மலைபோல்மேனி பவளவாய் கமலச்செங்கண்
அச்சுதா அமரரேறே ஆயர்தம் கொழுந்தேயென்னும்
இச்சுவை தவிரயான்போ யிந்திர லோகமாளும்
அச்சுவை பெறினும்வேண்டே னரங்கமா நகருளானே.

வேதநூல் பிராயம்நூறு மனிதர்தாம் புகுவரேனும்
பாதியுமுறங்கிப் போகும் நின்றதில் பதினையாண்டு
பேதை பாலகனதாகும் பிணிபசி மூப்புத்துன்பம்
ஆதலால் பிறவிவேண்டே னரங்கமா நகருளானே. 3

செடியாய வல்வினைகள் தீர்க்குந் திருமாலே
நெடியானே வேங்கடவா நின்கோயிலின் வாசல்
அடியாரும் வானவரு மரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே. 4

ஒன்றெனப் பலவென வறிவரும் வடிவினுள் நின்ற
நன்றெழில் நாரணன் நான்முகனர னென்னு மிவரை
ஒன்றெனும் மனத்துவைத்துள்ளிநும் மிருபசையறுத்து
நன்றென நலஞ்செய்வ தவனிடை நம்முடைநாளே. 5

திருமால் தோத்திரம் முற்றிற்று.

---



## 5. தக்ஷிண மூர்த்திப்பத்து.

(ஸ்ரீ காசிவாசி கோவிலூர் சிவானந்த சுவாமிகள் இயற்றியது)

ஆதியேயன்பே யகத்திலேயறிவா யமர்ந்திடுமெண்ணலே
யிசையை,யோதியேயுரைத்தே யொப்பிலியாழ்முனிக்கு முவப்
பரு ளுண்மையாமுறவே, யேதிலாவெளியே னேற்றியுன்னடிக்



கீழிருந்துமே மாந்திடலென்றோ, தீதிலாத்தேவே தக்ஷிண
மூர்த்த தேசிகச்செல்வமே சிவனே. 1

மாசிலாமணியே மரகதமலையே மருவுகல்லானிழன் மகிழ்
ந்து, பேசிலாப்பொருளே பெருந்தவர்முனிக்குப் பேசிடா
துணர்த்திய பெருமான், பாசனுனெனுமே பற்றினேனுன்றாள்
பராமுகம் பார்த்திடல்தகுமோ, தேசுலாந்தேவே தக்ஷிண
மூர்த்த தேசிகச்செல்வமே சிவனே. 2

ஒளியதாமுருவே யொப்பிலாக்குருவே யொருவருமுணர்
ந்திடா வொன்றை, வெளியதாவிளக்க வெளிவந்தவிமலோய்
விட்டகலா துணைவேண்டு, மெளியனுனெனக்கு மிரங்கிட
லென்றோ வினிவிடலெங்ஙன முனையே, தெளிவதாந்தேவே
தக்ஷிணமூர்த்த தேசிகச்செல்வமே சிவனே. 3

அரியனே யன்பே யனைவர்க்குமாதி யருட்குருவாகிய
வன்னுய், பிரியனேபிரானே பெரும்பொருட்பேற்றைப் பெறு
விக்கும்பெற்றியோய் பேயாய்த், திரிவனேனெனினுந் திகழு
முன்றாளைத் திண்ணமாய்ப்பிடித்தனன் றள்ளாய்த், தெரியொ
ணாத்தேவே தக்ஷிணமூர்த்த தேசிகச்செல்வமே சிவனே. 4

குரவனேகுறியே குரவர்க்குங்குருவே குருவெனுங்குண
முடைக் குன்றே, பிரமனூற்பிறப்பாம் பேரறிவாளர் பேறதாம்
பெரும்பயன் பயத்த, ஒருவனேயுனையே யுண்மையிலுடையே
னுதறிடலொவ்வுமோ வுரையாய், திரமுளார்தேவே தக்ஷிண
மூர்த்த தேசிகச்செல்வமே சிவனே. 5

அறவனே யயன்சேயவர்களுக்கரிய வைம்புலமடங்குமா
யோக, முறவனுயுணர்த்த யோகியாயொளிர்ந்த வுலகமோருரு
வெனு முணர்வே, இறுகவேயுன்ற னிணையடிபிடித்தே னெங்

கெழுந் தேகுவையினியே, திறமதாந்தேவே தக்ஷிணாமூர்த்த தேசிகச்செல்வமே சிவனே. 6

வேண்டுவார்வியப்பே விலையிலாநிதியே வேற்றுள வியன் குருவென்ன, தூண்டுருப்பொருளைச் சொல்லினாற் சொலாது தூயருட் டுலக்கினாற்காட்டும், ஆண்டவாவடியே னங்கையா லுன்ற னடியிணை யார்த்தனனகற்றாய்த், தீண்டொணாத்தேவே தெக்ஷிணாமூர்த்த தேசிகச்செல்வமே சிவனே. 7

ஊனிலாயென்ற னானுள்ளாயுருவ மொருகுணமொரு பெயரொன்றா, வானிலாயிசையில் வல்லவாவீணை வலக்கரத் தேற்றியவடிவோய், நானிலார்நணுகு நம்பவுன்னடியை நண்ணினே னகர்ந்திடனலமோ, தேனிலார்தேவே தெக்ஷிணாமூர்த்த தேசிகச்செல்வமே சிவனே. 8

குணமிலாய் குணத்தாற் கொண்டிடுங்கோவே குருபதங் கூறுமாபொருட்கு, இணக்கமாயிலக்கா யிலங்கிடுமிறையே யிகபரத் திசைக்கருமெம்மான், வணக்கமாயுந்தன் வாழடி வரித்தேன் வாழ்வித்தல் வள்ளலுன்வளப்பே, திணைக்கமர் தேவே தெக்ஷிணாமூர்த்த தேசிகச்செல்வமே சிவனே. 9

கருணையார்கடலே கண்மணிக்கதிரே காப்பதுன்கட னதுமன்றோ, அருணனாலுலக மலர்வதுமனைசே யங்கனையி மையதுங்காத்தல், தருணமாந் தடையோதாயி லிச்சேயாய்த் தனித்திடல் தண்ணருட்கழகோ, தெருணிறைத்தேவே தெக்ஷிணாமூர்த்த தேசிகச்செல்வமே சிவனே. 10

தக்ஷிணா மூர்த்திப்பத்து முற்றிற்று.

---



## 6 ஜகத்குரு சங்கரபகவன்

திக்விஜயசாரம்

என்னும்

## அருட்பஞ்சரத்நம்

---

[காசிவாசி ஸ்ரீலஸ்ரீ சிவானந்த சுவமிகளியற்றியது]

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆதிசிவனளித்தருளுமன் னையினுமினிய
வறுமுகவனம்புவிக்கணரு மறையாகமத்தை
நீதியினினிலைநிறுத்த குமாரபட்டனாகி
நெறியகலு சமண்டொலைத்து நிறுவிச்சாதனங்கள்

பூதியுறுபுருகூதன் மற்றுமவண்புடைசூழ்
புகழமரரும்புவிக்கண் புனிதர்களாய்த்தோன்றி
போதியநற்சிவஞானம் பூர்த்திசெயமண்ணிற்
புகழ்தருசங்கரன்வருவா னெனப்புகலுபோதே 1

சிவகுருபால்கேரளத்தில் வேதியத்தாய்க்கமரர்
தெளிபூக்க டிகழவருட் டிறமதனிற்றேன்றி
கவருறநாகத்தையக்க மணியெனவுங்காட்டி
கருதுறு பூச்சுணைக்காயின் கருப்பத்திலொளித்து
நவலிங்கத்திட்டமணி வில்வமதுந்தனது
நடுமிடறிலுறச்செய்து நண்ணியுமேவானே
தவமுமெட்டுக் குழவிகளாய் பூச்சுணைக்காய் வித்தை
தானுணர்ந்து தருப்பையினுனைறு மணமுண்டாக்கி 2

இறைவிழாவிரதத்தி லெழுந்தருளுச்சவரா
யேழைக்குப் பொன்னெல்லிக் கனியதுவுமீந்து
கறைகராபிடிப்பகற்றிக் கடுந்துறவுபெற்று
கனவெள்ளங்கமண்டலத்திற் கடுகளவாயடக்கி
நிறைகாவியாடையையு நிழற்குடையதாக்கி
நெருங்குசிவப்புலையனுக்கு நிகழுண்மைகூறி
அறைவியா தன்முனிவர் வரமடைந்துமன்னைக்
காறழைத்துக் கங்கைமிசைச் சீடனையுமழைத்தே 3

தருக்குமண்டனக்கவியைத் தாழமிகவென்று
தனக்குமால்கால்தீ தண்கமலனுமாய்த்தோன்றி
இருக்குமவர்களைச்சீடரீ ரிரண்டாயேற்று
விறந்தகோவுடம்படைந்து வின்புமிகவுய்த்து
பெருக்குகலைமகளாம் பாரதியாரைவென்று
பிணமானவேதியன்சேயைப் பிழைக்கச்செய்து



செருக்குமாணவர்கட்குக் கவித்திறனுமீந்து
செந்தீயைவலக்கரத்திற் றிகழ்ந்திலங்கச்செய்து 4

மாருதகேரளத்தின் மறுசாபமீந்து
மருவலருஞ்சருவக்ஞ மாபீட மேறி
கூறெறுணுவருட்செய்கை குவலயத்திலியற்றி
கொள்ளுமுலகனைத்திற்குங் குரவனுமேயாகி
ஆறுறுஞன்கொழிந்த வாயுளதின்முடிவி
லருங்குகையிலமர் நிட்டைதனையடைந்தவன்றே
பேருனவிடபவாகன மதனிற்பிறங்கப்
பெருங்கயிலையடைந்தனன் பேர்சங்கரனுஞ் சிவனே. 5

---

## 7. சங்கரபகவன் திருவருட்பத்து.

(ஸ்ரீகாசிவாசி கோவிலூர் சிவானந்தசுவாமிகள் இயற்றியது.)

உலகத்தோர்குரவ வுண்மையாம்பொருளே வொன்றென
வுணர்த்தினேய்சமயக், கலகத்தோர் காணுக்கதியையுங்காட்டி
கடையனைக் காத்தகண்மணியே, பலகற்றோர் பணித்தபரம
தம்பரவு பரமனுங் குரவர்கள்தம்முள், திலகமாந்தேவே சங்
கரபகவத் தேசிகச்செல்வமே சிவனே. 1

ஆதியாங்குருவே யருளதினுருவே யறிவருமறை முடிக்
கமலம், நீதியாய்விரிய நிலத்தெழுகதிரே நிசநெறிநிறுவிய நிம
லோய், சோதியேசுகமே சுத்தமாஞ்சொரூப சுருதியிற்சொல்
லுமோர்துணையே, தீதிலாதெனையாள் சங்கரபகவத் தேசிகச்
செல்வமே சிவனே. 2

தருவெனும் பிரமசூத்திரந்தழைத்து தண்ரசவத் விதக்க
னியை, இருநிலத்தளிக்க விணையில்பாடியநீ ரெடுத்தருளேக

மேயிறையே, குருவதிலரச குணமதிற்குன்ற கூரருள்ஞானத் திற்கடலோய், திருவறுமெனையாள் சங்கரபகவத் தேசிகச் செல்வமே சிவனே. 3

அத்தனே யையாவறிவெ லாங்கடந்த வத்விதவரும் பொருளளித்த, சுத்தனே துரியா சுருதியின் றுணிபைத் தொல் லுலகெங்குமீகுருவே, பித்தனேனெனையாள் பேரருட்பிழம் பே பெறற்கரும் பேறுபெறுவித்த, சித்தனே சங்கரபகவனுங் குரவத் தேசிகச்செல்வமே சிவனே. 4

குருவெனும்பொருளே குவலயவிருளைக் கொன்றிட ஞானமாம் வாளைத், தருவெனத்தந்தோய் தரணியிற்றனைத் தனித்திட்டதாணுவேதமியன், கருவெனுங்கடலே கதிய தாய்நிற்றல் கருணையாலய வுனக்கழகோ, திருவெனுஞ்சங்கர பகவனுங்குரவத் தேசிகச்செல்வமே சிவனே. 5

மதவிருண்மாற்று மாவொளிமதியே மறைமுடி மாண் பொருள்மண்ணில், உதவியவுறவே யுண்மையாங்குருவேயுன தடி யுன்னிடாவுலுத்தன், பதவியும்பெறவேபரமவுன்னருளைப் பாலிப்பதென்று நீபதியே, சிதமுறுதேவே சங்கரபகவத் தேசிகச்செல்வமே சிவனே. 6

சாலங்கட்கதீத சகசவாழ்வதனைச் சகமெலாந் தகவிய தாயே, காலங்களோர்ந்து கடற்றரையதனிற் கருதருமறை சொலுங்கருத்தை, ஆலங்களேயவருந்துறவதனு லடைந்து மேயறிவித்த வண்ணல், சீலங்கள்சேர்ந்த சங்கரபகவத் தேசி கச்செல்வமே சிவனே. 7

சண்மதநிறுவித் தடிந்துவைகையைச் சதுரருக்கருளிய தலைவ, உண்மதமூன்று மொழித்துமோரிரண்டு வூழ்வினை விலக்கியவொருவ, கண்மணியேற்பக் கதியையுமுணர்த்திக்





கடையனைக் காத்திடலென்றோ, திண்குருத்தேவ சங்கரபக வத் தேசிகச்செல்வமே சிவனே. 8

அறிவிலாக்கரும மகங்குழைபக்தி யடங்குறுமியோகமா மவைகள், பிறிவிலாப்பெரிய பேறதையளிக்கும் பெற்றியதன் றெனப்பெயர்த்து, குறியுலாஞான மொன்றுமேவீடு கொடுத் திடுமென்னவே குறித்து, சிறியனுமெனையாள் சங்கரபகவத் தேசிகச்செல்வமே சிவனே. 9

வேதமாம்பசுவில் வியாதனுங்கறந்த விமலமாஞ் சூத்திரப் பாலை, போதமாம்நவ நீதமதாய்க்கடைந்து புவியுளார்க் களித் தருள்புனிதா ஏதமாம்நாயேற் கிரங்கிடலென்றோ வெனக் குனையன்றியாரெந்தாய், சீதமாமனத்த சங்கரபகவத் தேசி கச்செல்வமே சிவனே. 10

சங்கரப்பகவன் திருவருட்பத்து முற்றிற்று.

---

## 8. ஸ்ரீசங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள்

### தோடகசந்தத்தோத்திரம்.

விதிதாகிலசாஸ் த்ரஸுதா ஜலதே
மஹிதோப நிஷத் கதிதார்த்தநிதே
ஹ்ருதயேகலயே விமலம் சரணம்
பவசங்கர தேசிகமே சரணம்




கருணவருண லயபாலயமாம்
பவசாகரதுக்க விதூனஹ்ருதம்
ரசிதாகில தர்சன தத்வவிதம் (பவசங்) 2

பவதாஜனதா ஸுஹிதா பவிதா
நிஜபோத விசாரண சாருமதே
கலயேஸ்வர ஜீவவிவேக விதம் (பவசங்) 3

பவயேவபவா நிதிமேநிதராம்
ஸமஜாயதசே தவஸிகௌதுகதா
மமவாரய மோஹ மஹாஜலதிம் (பவசங்) 4
ஸுக்ருதேயிக்ருதே பஹுதாபவதோ
பவிதாபததர்ஶன லாலஸதா
அதிதீனமிமம் பரிபாலயமாம் (பவசங்) 5
ஜகதீமவிதும் கலிதாஹ்ருதயோ
விஶரந்திமஹா மஹஸச்சலத:
அஹிமாம் ஸுரிவா த்ரவிபாஸிகுரோ (பவசங்) 6
குருபுங்கவ புங்கவ கேதனதே
ஸமதாமயதாம் நஹிகோபிஸுதி:
சரணாகதவத்ஸல தத்வநிதே (பவசங்) 7
விதிதாநமயா விஶதைககலா
நசகிஞ்சன காஞ்சனமஸ்திகுரோ
த்ருதமேவவிதே ஹிக்ருபாம் ஸஹஜாம். (பவசங்) 8
சுருதிஸ்மிருதிபுராணானா மாலயம் கருணாலயம்
நமாமி பகவத்பாதம் சங்கரமலோக சங்கரம்.

தோடகசந்தத்தோத்திரம் முற்றிற்று.

---

## 9. சங்கரநாமாவலி

(ஸ்ரீமத் காசிவாசி கோவிலூர் சிவானந்தசுவாமிகள் இயற்றியது)

சங்கர குருவே சகமுதலே
சண்மத வரசே சமப்பொருளே 1
மங்கல வடிவே மதிப்படியே
மறைமுடி விளக்கே மதக்கொடியே 2



அத்வைத மணியே யருளொளியே
அகத்துறை யமுதே யருங்கதிரே 3
ஆனந்த மளிக்கு மருட்கனியே
ஆகமம் விளக்கு மகவிளக்கே 4
இத்தரை யாண்ட விறையவனே
இக்கரை கடந்த விமையவனே 5
உத்தமர் தமக்கு முத்தமனே
உவப்புறு முறவே யுயிர்த்துணையே 6
எம்மதங்களுக்கு மிதத்தவனே
எவர்களு மிறைஞ்சும் பதத்தவனே 7
ஒருபொருட் டுணிவி னுரத்தோனே
ஒளிதரு மறையின் சிரத்தோனே 8
ஐயங்க ளகற்றிய வருணாதா
ஐயறி வடக்கிய வருணீதா 9
ஈசனா யெழுந்தரு ளிறையவனே
ஈறிலாப் பதந்தரு மினியவனே 10
துறவது நிறுவிய தூயவனே
துறவருந் துதிக்குந் துதியானே 11
குமதரு மிணங்குங் குணக்கடலே
குமதிகள் தெரியாக் குருதேவே 12
அத்வைத வமுதை யருந்தினவா
அன்பர்கட் கருளு மருங்குரவா 13
மதமற்ற மதிப்பொருள் மதிப்பவனே
மதகரியென மறை விரிப்பவனே 14

மறையவர் குலத்தி லுதித்தவனே
மறைப்பொருள் விளக்கிய மாயோனே 15
வேதாந்தம் விளைந்திடும் மெய்ப்பரனே
வேதாவும் போற்றிடும் பதத்தவனே. 16

சங்கரநாமாவலி முற்றிற்று.

---

## 10. குருபஞ்சகம்

(ஸ்ரீமத் சங்கரானந்தசுவாமிகள் இயற்றியது)

எப்பொருள்களுமாயேகமாயெங்கு மிலங்கிடுமுருவமாய்
மேலோர், செப்பிடும்பொருளாய்ச் சகமெலாம்படைத்துஞ்
செய்கையோர் சிறிதுமேயில்லா, அப்பனேயையா வரும்
பெரும்பொருளே வடியனையாண்டதோர் கோவே, தப்பிலா
வுன்றன் றண்ணடிபணியுந் தமியனைத்தாங்குவாய்த்தேவே. 1

துங்கமாந்துரியவவத்தை யிற்றுலங்குந் தூயனேதுய
ரெலாநீக்கச், சங்கொடுகதையுஞ் சக்கரமொழித்துச் சனன
னிளைப்பினையிரித் தெனையாண்ட, வங்கண்மாதவனை யகத்தி
னுளிருத்தி யனுதினமிறைஞ்சி வாழ்த்திடுவாம். 2

எண்ணருமிறைவாபோற்றி யெண்குணவடிவேபோற்றி
அண்ணலேபோற்றியைய வத்தனேபோற்றி போற்றி
கண்ணென வெல்லாந்தந்த கார்முகில் வண்ணாபோற்றி
விண்ணவர்க்கரியாய்போற்றி விமலனேபோற்றி போற்றி. 3

தேரிலே யிருந்தோய்போற்றி தெருளுறும் வடிவேபோற்றி
நீரிலேயோகஞ்செய்யுந் நிமலனே நித்தாபோற்றி
பாரெலாம் மெய்யென்றெண்ணும் பாவியேற்கருள்வாய் [போற்றி
பாரெலாம்பரித்தும் பற்றாப்பரமனேபோற்றி போற்றி. 4



இந்திரஜாலமொத்த விரும்பிரபஞ்சந்தன்னை
மந்திரமொன்றால்மாற்றி மயக்கறுத்தென்னையாளச்
சுந்தரவடிவாய்த்தோன்றுந் தோன்றலே சுத்தாபோற்றி
அந்தமிலாதவின்ப மருளுவாய் போற்றி போற்றி. 5

குருபஞ்சகம் முற்றிற்று.

---

## 11. ஆசாரியஷட்கம்

(ஸ்ரீமத் சங்கரானந்தசுவாமிகள் இயற்றியது)

சங்கரவடிவேபோற்றி சகமெலா நிறைந்தோய்போற்றி
திங்களுங் கங்கைநீக்கித் திகழ்ந்திடுந் தீராபோற்றி
மங்கையர் மயக்கில்சிக்கா மதமெனக்கருள்வாய்போற்றி
துங்கமாந்துரியங்காட்டாய்த் தூயவாபோற்றி போற்றி. 1

ஆரணவடிவேபோற்றி யரும்பெரும்பொருளே போற்றி
மாரணமொழிப்போய் போற்றி மரகதநிறத்தோய் போற்றி
தாரணைதியானமில்லாத் தமியனேற்கருள்வாய் போற்றி
பாரெலாநிறைந்தப்பாளும் பரவிடும்பரனே போற்றி. 2

ஆலடியமர்ந்தோய்போற்றி யாலமுண்டவனேபோற்றி
நாலரும்வேதரூபா நலமெலாமளிப்போய்போற்றி
பால்மொழிமாரைநாடும் பாவியேற்கருள்வாய்போற்றி
மாலயன்நேடிவாடு மங்கலவடிவேபோற்றி. 3

மாலயன்மற்றுளோரும் மால்படுமதுவைக்கண்டு
காலனையுதைத்தவெம்மான் கருணையோருருவமாகிச்
சீலமுங்குணமுமிக்க சிவகுருசேயாய்வந்து
காலடியவதரித்தோன் காலடிநந்தலைக்கே. 4

மங்கலமெல்லாநல்கும் வனந்தனிலினிதமர்ந்து
தங்கினசீடருக்குத் தத்துவமுரைத்துச்சித்தம்

பொங்குறுமான்மாதன்னில் பொருந்தியோர்சலனமற்ற
சங்கரவடிவைத்தானே சந்ததஞ்சிந்தைசெய்வாம். 5

மதம்பலவென்றுமேலா மதத்தையேநிறுவிநல்லோ
ரிதம்பெறப்பனுவலோதிக் கச்சியிலிலங்கித்தோன்றி
சுதையெனப்பருகுவோர்க்குச் சுத்தமாநிலையைக்காட்டும்
விதுமுகசங்கராக்கியன் விரைகழல்போற்றிபோற்றி. 6

ஆசாரியஷட்கம் முற்றிற்று.

---



## 12. அம்பாஷ்டகம்.

பரந்தெழுந்த சமண்முதலாம் பரசமய விருணீங்கச்
சிரந்தழுவு சைவநெறித் திருநீற்றி னொளிவிளங்க
வரந்தைகெடப் புகலியர்கோ னமுதுசெயத் திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி. 1

எண்ணிறந்ததாயர் வயிற்றிருந்து பிறந்திடுந்துயர மனைத்துநீங்க, மண்ணிறந்து புனலிறந்து வயங்கியசெந்தீயிறந்து வளியினோடு, விண்ணிறந்து பெருங்கருணைத் தாயாகித்தன தகட்டின் விரவவைத்துக், கண்ணிறைந்த கவின்காட்டு மகிலாண்டநாயகியைக் கருத்துள்வைப்பாம். 2



சத்தியாய் விந்துவாய் மனோன்மணியாய்த் தயங்கியமகேசையாயுமையாய், நித்திலவடந்தாழ்முகிழ் முலைத்திருவாய் நெடும்புகழ்வாணியாய் வேறாய், எத்திறமிறைவனின்றன னவனுக்கியைதர வத்திறநின்று, மெத்தியவுயிரின் மலவிருள் கெடுத்து விளங்குபூரணியை யேத்தெடுப்பாம். 3

கனத்தாள் வெங்கயமுகனுங்கந்தனுஞ் சம்பந்தனும் பாலுண்டகும்ப, தனத்தாளே யறம்வளர்த்தகரத்தாளே திரிபுரங்கள்தழலாய்வேவச், சினத்தாளே சிறியேங்கள்செய்த பிழை பொறுத்திரக்கஞ் செய்யுஞ்செய்ய, மனத்தாளே நின் கமல மலர்த்தாளே யென்தலைமேல் வைத்தாள்வாயே.. 4

சுரும்புமுரல் கடிமலர்ப்பூங்குழல்போற்றி யுத்தரியத் தொடித்தோள்போற்றி, கரும்புருவச்சிலைபோற்றி கவுணியர்க்குப்பால் சுரந்தகலசம் போற்றி, இரும்பு மனங்குழைத் தென்னை யெடுத்தாண்டவங்கயற்க ணெம்பிராட்டி, யரும்புமிள நகைபோற்றியாரணநூபுரஞ்சிலம்பு மடிகள்போற்றி. 5

பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி
புராந்தகி த்ரியம்பகி யெழில்
புங்கவி விளங்குசிவ சங்கரி சஹஸ்ரதள
புஷ்பமிசை வீற்றிருக்கும்
நாரணி மனோதீத நாயகி குணாதீத
நாதாந்த சத்தி யென்றுன்
நாமமே யுச்சரித் திடுமடியர் நாமமே
நானுச்சரிக்க வசமோ
ஆரணி சடைக்கடவு ளாரணி யெனப்புகழ
வகிலாண்ட கோடியீன்ற

அன்னையே பின்னையுங் கன்னியென மறைபேசு
மானந்தரூப மயிலே
வாரணியு மிருகொங்கை மாதர்மகிழ் கங்கைபுகழ்
வளமருவு தேவையரசே
வரைராஜனுக் கிருகண் மணியாயுதித்த மலை
வளர்காதலிப் பெண்ணுமையே. 6

பூதமொடு பழகிவள ரிந்திரிய மாம்பேய்கள்
புந்திமுதலான பேய்கள்
போராடு கோபாதி ராக்ஷஸப் பேய்களென்
போதத்தை யூடழித்து
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தானிவ் வல்லலெல்லாம்
வீழும்படிக்குனது மௌன மந்த்ராதிக்ய
வித்தையை வியந்தருள்வையோ
நாதவடிவாகிய மஹாமந்த்ர ரூபியே
நாதாந்த வெட்டவெளியே
நற்சமயமானபயிர் தழையவருமேகமே
ஞானவானந்த மயிலே
வாதமிடு பரசமயம் யாவுக்கு முணர்வரிய
மகிமைபெறு பெரியபொருளே
வரைராஜ னுக்கிருகண் மணியாயு தித்தமலை
வளர்காதலிப் பெண்ணுமையே. 7

பொய்யாதமொழியு மயல்செய்யாத செயலும்வீண்
போகாத நாளும் விடயம்
புரியாதமனமு முட்பிரியாத சாந்தமும்
புந்திதளராத நிலையு



மெய்யாத வாழ்வும் வேறெண்ணாத நிறைவுநினை
யென்றுமறவாத நெறியு
மிறவாத தகவு மேற்பிறவாத கதியுமிவ்
வேழையேற் கருள்செய் கண்டாய்
தொய்யாது குவியாது குமையாது மணம்வீசு
கோமளத்தெய்வ மலரே
கோவாத முத்தமே குறையாத மதியமே
கோடாத மணிவிளக்கே
யையான னங்கொண்ட தில்லையம்பதிமருவு
மண்ணலார் மகிழுமணியே
யகிலாண்டமுஞ் சராசரமு மீன்றருள்பர
சிவானந்த வல்லியுமையே. 8

---

கலைநிறை கணபதி சரணஞ் சரணம்
கஜமுக குணபதி சரணஞ் சரணம்
தலைவனி னிணையடி சரணஞ் சரணம்
சரவண பவகுக சரணஞ் சரணம்

சிலைமலை யுடையவ சரணஞ் சரணம்
சிவசிவ சிவசிவ சரணஞ் சரணம்
உலைவறு மொருபரை சரணஞ் சரணம்
உமைசிவை யம்பிகை சரணஞ் சரணம்.

திருச்சிற்றம்பலம்

அம்பாஷ்டகம் முற்றிற்று.

---



## 13. ஸரஸ்வதி பஞ்சகம்

ஆயகலைக ளறுபத்து நான்கினையும்
ஏயவுணர்விக்கு மென்னம்மை—தூய
உருப்பளிங்கு போல்வாளென் னுள்ளத்தினுள்ளே
இருப்பளிங்கு வாரா திடர். 1

தாவறு முலகெலாந் தந்த நான்முகத்
தேவுதன் றுணைவியாய்ச் செறிந்த பல்லுயிர்
நாவுதோ றிருந்திடு நலங்கொள் வாணிதன்
பூவடி முடிமிசைப் புனைந்து போற்றுவாம். 2

நாடும்பொருட்சுவை சொற்சுவை தோய்தர நாற்கவியும்
பாடும்பணியிற் பணித்தருள்வாய் பங்கயாசனத்திற்
கூடும்பசும்பொற் கொடியே கனதனக்குன் றுமைம்பாற்
காடுஞ்சுமக்குங் கரும்பே சகலகலாவல்லியே. 3

தூக்கும்பனுவற் றுறைதோய்ந்த கல்வியுஞ் சொற்சுவை தோய், வாக்கும் பெருகப்பணித்தருள்வாய் வடநூற்கடலுந், தேக்குஞ் செழுந்தமிழ்ச் செல்வமுந் தொண்டர் செந்நாவினின்று, காக்குங் கருணைக்கடலே சகலகலாவல்லியே. 4



பெருந்திருவுஞ் சயமங்கையு மாகியென் பேதைநெஞ்சி, லிருந்தருளுஞ் செஞ்சொல் வஞ்சியைப் போற்றினெல்லா வுயிர்க்கும், பொருந்திய ஞானந்தருமின்பவேதப் பொருளுந் தருந், திருந்திய செல்வந்தருமழியாப் பெருஞ்சீர்தருமே. 5

ஸரஸ்வதி பஞ்சகம் முற்றிற்று.

---



## 14. இலக்குமிபஞ்சகம்

தண்கமலத் திருந்தீசனடிக் கமலமனக் கமலந்தன்னில் வைத்து, வண்கமலக்கண் ணனை மணவாள னெனப்பெறுவான் மாதவஞ்செய், தொண்கமலாலயமெனும் பேரொளியார்ந்து திருவாரூர்க்குகந்தணிந்த, பெண்கமலங் கைக்கமலம் பிடித்த கொடிதனைத்தொழுது பெரிது வாழ்வாம். 1

மடற்கமலநறும்பொகுட்டிலரசிருக்குஞ் செந்துவர்வாய் மயிலே மற்றுன், கடைக்கணருள் படைத்தன்றோ மணிவண் ணனுலகமெலாங் காவல் பூண்டான், படைத்தனனுன் முகக் கிழவன் பசுங்குழவிமதிபுனைந்த பரமன்றானுந், துடைத்தன னின் பெருஞ்சீர்த்தி யெம்மனோரா லெடுத்துச் சொல்லற் பாற்றோ. 2

மல்லனெடும் புவியனைத்தும் பொதுநீக்கித்தனிபுரக்கு மன்னர்யாருங், கல்வியினிற்பேரறிவிற் கட்டழகினிகரில்லாக் காட்சியோரும், வெல்படையிற் பகைதுறந்து வெஞ்சமரில் வாகைபுனைவீரர்தாமு, மல்லிமலர்ப் பொகுட்டுறையு மணி யிழை நின்னருணோக்க மடைந்துளாரே. 3

செங்கமலப் பொலந்தாதிற் றிகழ்ந்தொளிருமெழின் மேனித்திருவே வேலை, யங்கணுலகிருடுறக்கு மலர்கதிராய் வெண்மதியாயமரர்க்கூட்டும், பொங்கழலாயுலகளிக்கும் பூங் கொடியே நெடுங்கானிற் பொருப்பின்மண்ணி, லெங்குளைநீ யவணன்றோ மல்லல்வளஞ் சிறந்தோங்கியிருப்பதம்மா. 4

உலகம்புரக்கும் பெருமான்றனுளத்தும் புயத்துமமர்ந் தருளி, யுவகையளிக்கும் பேரின்பவுருவே யெல்லாமுடை யாளே, திலகஞ்செறி வாணுதற்கரும்பே தேனேகனிந்த செழுங்கனியே, தெவிட்டாதன்பருளத்துள்ளே தித்தித்தெழு மோர் தெள்ளமுதே, மலகஞ்சுகத்தேற் கருளளித்தவாழ்வே யென்கண்மணியேயென், வருத்தந்தவிர்க்க வருங்குருவாம் வடிவே ஞானமணிவிளக்கே, சலகந்தரம்போற் கருணைபொழி தடங்கட்டிருவே கணமங்கைத், தாயேசரணஞ் சரணமிது தருணங் கருணை தருவாயே. 5

இலக்குமிபஞ்சகம் முற்றிற்று.

---

## 15. நீதிபோதம்.

ஸ்ரீமத் சங்கரானந்தசுவாமிகள் இயற்றியது.

ஆனந்தக்களிப்பு

சங்கர சங்கர சம்போ—சிவ
சங்கர சங்கர சங்கர சம்போ
சங்கர சங்கர சம்போ

(விவேகம் மனதினிடங் கூறுவது)

அண்டங்க ளெங்கும் நிறைந்த—இந்த
ஆனந்தக் கூத்தனைப் பாரடி தோழி (சங்) 1

ஆடு மாடாதியைத் தின்று—பேய்போ
லாடுகின்றோரைப் பாராதே தோழி (சங்) 2

இந்தவுடல மெடுத்தும்—இனி
சிந்தை யடக்காம லென்செய்தாய் தோழி (சங்) 3

ஈசனடியை யிறைஞ்சி—நல்ல
நேசமாய் சான்றோரைக் கூடுவாய் தோழி (சங்) 4

உண்டு முடுத்து மிருந்தால்—எமன்
மண்டை யுடைக்கவே மிண்டாமோ தோழி (சங்) 5

ஊசுமுடலை நானென்று—சிவ
நேசமில்லாமல் நீ கெட்டாயே தோழி (சங்) 6

இருக்காதி வேதங்கள் சொல்லும்—நிலை
தருக்காதியாலே யுணராமோ தோழி (சங்) 7

ரூபநாமாதிக ளில்லா—சுத்த
மோன நிலையை மொழியாமோ தோழி (சங்) 8

லிங்க குரு சங்கமத்தை—சதா
சிந்தை செய்வாயாகி லின்பமாந் தோழி (சங்) 9

லிங்க குணங்கள் கடந்த—சுயஞ்
சோதியாய் நீநிற்க வேண்டுமே தோழி (சங்) 10

ஏகாந்த தேசத் திருந்து—மிக்க
மோகங்க ளெல்லா மகற்றுவாய் தோழி (சங்) 11

ஐயமெடுத்துப் புசித்து—சற்றும்
ஐயுறவின்றி யிலங்குவாய் தோழி (சங்) 12

ஓங்கார உண்மையில் சேர்ந்து—தினம்
நீங்காதிருக்க விசையுமோ தோழி (சங்) 13

* ஔரஸ மின்றியிருந்து—சுத்த
ஆரணர்த்தத்தை நினைப்பாய் நீ தோழி (சங்) 14

அம்பலத் தாடும் பரனை—பல
கம்பமகற்றித் தெளிந்திடு தோழி (சங்) 15

அட்டதிசையும் நிறைந்து—அப்பால்
எட்டுஞ் சோதியை முட்டுவாய் தோழி. (சங்) 16

நீதிபோதம் முற்றிற்று.

---

* ஔரஸம்—சித்தவிகற்பம்.



## 16. என் செய்கேன்.

ஸ்ரீமத் சங்கரானந்தசுவாமிகள் இயற்றியது

ஏமமா மின்சொலோ சொல்வதில்லை
எவ்வுயிரு மென்னுயிர்போல் நினைப்பதில்லை
காமமாங் கொடியபேய் பிடித்தலைத்துக்
காலனர் தொடர்பிலே விடுவதையா
* சாமமே சந்ததமும் ஓதுவோனே
தண்சரண புணையை யெனக்கருளாயாகில்
ஏமமாம் பவக்கடலில் படிந்தநாயே
னென்செய்கே னென்செய்கே னியம்புவாயே 1

நாமமோ நின்னுடைய நவில்வதில்லை
நறுமலரோ பறித்துன்னைப் பணிவதில்லை
சேமமா முன்வடிவம் நினைப்பதில்லை
சகமெலாஞ் சித்தெனவே சிந்தையில்லை
சாமமே சந்ததமும் ஓதுவோனே
தண்சரண புணையையெனக் கருளாயாகில்
ஏமமாம் பவக்கடலில் படிந்தநாயே
னென்செய்கே னென்செய்கே னியம்புவாயே. 2

---

* விருந்தாவனத்தில் சதாகாலமும் சாமவேதம்பாடுகின்ற ஸ்ரீ கிருஷ்ணபகவானே!

கோமானே யருளுருவாய்க் கண்முன்வந்த
குருமணியை யனவரதங் கருதுகில்லேன்
காமாதிபகை வென்றக் ககனமென்னக்
கம்பீரமனி தரையா மறிவதில்லை
சாமமே சந்ததமும் ஓதுவோனே
தண்சரண புணையையெனக் கருளாயாகில்
ஏமமாம் பவக்கடலில் படிந்தநாயே
னென்செய்கே னென்செய்கி னியம்புவாயே. 3

ஆமைபோ லைந்துறுப்பு மடக்குகில்லே
னருந்தவமோ ரணுவளவு மியற்றுகில்லேன்
தீமைசேர் விடயவேட்கை விடுவதில்லை
தினந்தினமுந் திகைப்பதற்கோ ரளவுமில்லை
சாமமே சந்ததமும் ஓதுவோனே
தண்சரண புணையையெனக் கருளாயாகில்
ஏமமாம் பவக்கடலில் படிந்தநாயே
னென்செய்கே னென்செய்கே னியம்புவாயே. 4

சாமமறை புகல்கின்ற வாக்கியத்திற்
சற்றுமனம் நிச்சலமாய் நிலைப்பதில்லை
பூமாவைப் பூரணமா யுணர்ந்ததில்லை
புல்லியர்போ லெங்கணுமே சுழலாநின்றேன்
சாமமே சந்ததமும் ஓதுவோனே
தண்சரண புணையையெனக் கருளாயாகில்
ஏமமாம் பவக்கடலில் படிந்தநாயே
னென்செய்கே னென்செய்கே னியம்புவாயே. 5

என்செய்கேன் முற்றிற்று.

---



ஸ்ரீ சங்கரபகவத் பாதாசாரிய சுவாமிகள்
திருவாய் மலர்ந்தருளிய

## 17. அக்ஷரமாலிகா ஸ்தோத்திரம்

ஸாம்பஸதாசிவ ஸாம்பஸதாசிவ
ஸாம்பஸதாசிவ ஸாம்பசிவா ஹர
அத்புதவிக்ரக வமராதீஸ்வர
அகணிதகுணகண அம்ருதசிவா ஹர (ஸாம்ப) 1
ஆனந்தாம்ருத வாஸ்பிதரக்ஷக
ஆத்மானந்த மஹேசசிவா ஹர (ஸாம்ப) 2
இந்துகலாதர இந்த்ராதிப்ரிய
சுந்தரரூப ஸுரேசசிவா ஹர (ஸாம்ப) 3
ஈசஸுரேச மஹேசஜனப்ரிய
கேசவஸேவித கீர்த்திசிவா ஹர (ஸாம்ப) 4
உரகாதிப்ரிய பூஷணசங்கர
நரகவிநாச நடேசசிவா ஹர (ஸாம்ப) 5
ஊர்ஜிததானவ நாசபராத்பர
ஆர்ஜிதபாப விநாசசிவா ஹர (ஸாம்ப) 6
ருக்வேதஶ்ருதி மௌலிவிபூஷண
அர்க்கசந்த்ராக்னி த்ரிநேத்ர சிவாஹர(ஸாம்ப) 7

ரூபநாமாதி ப்ரபஞ்சவிலக்ஷண
தாபநிவாரண தத்வசிவா ஹர (ஸாம்ப) 8

லிங்கஸ்வரூப ஸபேசபுதப்ரிய
மங்களமூர்த்தி மஹேசசிவா ஹர (ஸாம்ப) 9

ஊதாதீஶ்வர ரூபப் ப்ரியசிவ
வேதாந்தப்ரிய வேத்யசிவா ஹர (ஸாம்ப) 10

ஏகானேக ஸர்வேச ஜனப்ரிய
போகாதிப்ரிய பூர்ணசிவா ஹர (ஸாம்ப) 11

ஐஶ்வர்யாஶ்ரய சின்மயசித்கன
ஸச்சிதானந்த மஹேசசிவா ஹர (ஸாம்ப) 12

ஓங்காராதிப:வுரகவிபூஷண
ஹ்ரீங்காரப்ரிய யீசசிவா ஹர (ஸாம்ப) 13

ஔரஸலாளித அந்தகநாசன
கௌரிஸமேத கிரீசசிவா ஹர (ஸாம்ப) 14

அம்பரவாஸ சிதம்பரநாயக
தும்புருநாரத ஸேவ்யசிவா ஹர (ஸாம்ப) 15

ஆஹாரப்ரிய வட்டதிகீஶ்வர
யோகிஹ்ருதிப்ரிய வாஸசிவா ஹர (ஸாம்ப) 16

உயிரேழுத்து முற்றிற்று. மெய்யெழுத்து:—

கமலாஸனவர கைலாஸாதிப
கருணாஸாகர காந்தசிவா ஹர (ஸாம்ப) 17

கட்கசூலம்ருகடங்க தநுர்த்தர
விக்ரமரூப விசேஷசிவா ஹர (ஸாம்ப) 18



கங்காகிரிஜா வல்லபகுணஹித
சங்கரஸர்வ ஜனேசசிவா ஹர (ஸாம்ப) 19

காதுகபஞ்சன பாதகநாசன
போதஸ்வரூப பூர்ணசிவா ஹர (ஸாம்ப) 20

ஙாந்தஸ்வரூபா நந்தவனாஶ்ரய
வேதவேதாந்த ஸ்வரூபசிவா ஹர (ஸாம்ப) 21

சண்டவிநாசன ஸகலஜனப்ரிய
மண்டலாதீச மஹேசசிவா ஹர (ஸாம்ப) 22

சத்ரகிரீட ஸுகுண்டலஶோபித
புத்ரப்ரிய புவனேசசிவா ஹர (ஸாம்ப) 23

ஜன்மஜராமர ணாதிவிநாசக
கல்மஷவிரஹித காசிசிவா ஹர (ஸாம்ப) 24

ஜங்காராஶ்ரய ப்ருங்கிரிஷ்யேஶ்வர
ஓங்காரேச விஶ்வேசசிவா ஹர (ஸாம்ப) 25

ஞானஞ்ஞான விநாசகநிர்மல
தீனஜனப்ரிய தீப்தசிவா ஹர (ஸாம்ப) 26

டங்காத்யாயுத தாரணஸத்வர
கிங்கரஸேவ்ய கிரீடசிவா ஹர (ஸாம்ப) 27

டங்கஸ்வரூப ஸஹஸ்ரகரோத்தம
வாகீஶ்வரவர தேவசிவா ஹர (ஸாம்ப) 28

டம்பவிநாசன டிண்டிமபூஷண
அம்பரவாஸ ஸதீசசிவா ஹர (ஸாம்ப) 29

டமடமடமருக டாரிமநிச்சல
டுண்டிவிநாயக ஸேவ்யசிவா ஹர (ஸாம்ப) 30

நளினவிலோசன நடனமனோஹர
அளிகுலபூஷண அம்ருதசிவா ஹர (ஸாம்ப) 31

தத்வமஸ்யாதி வாக்யார்த்தஸ்வரூப
நித்யஸ்வரூப நிஜேசசிவா ஹர (ஸாம்ப) 32

ஸ்தாவரஜங்கம புவனவிலக்ஷண
வ்யாபகவரமுனி ஸேவ்யசிவா ஹர (ஸாம்ப) 33

தந்திவிநாசன நளினமனோஹர
சந்தனலேபித சரணசிவா ஹர (ஸாம்ப) 34

தரணீதரதர தவளவிபாஸித
தானுதிபஸக வரதசிவா ஹர (ஸாம்ப) 35

நானுமணிகண பூஷண நிர்க்குண
நதஜனபோஷண நாதசிவா ஹர (ஸாம்ப) 36

பார்வதிநாயக பன்னகபூஷண
பரமானந்த பரேசசிவாஹர (ஸாம்ப) 37

பாலவிலோசன பானுகோடிப்ரிய
ஹாலாஹலதர அமுதசிவா ஹர (ஸாம்ப) 38

பந்தவிமோசன கஜசர்மாம்பர
ஸ்கந்தாதிப்ரிய கனகசிவா ஹர (ஸாம்ப) 39

பஸ்மவிலேபன பவபயபஞ்சன
விஸ்மயரூப விசேஷசிவா ஹர (ஸாம்ப) 40

மன்மதநாசன மதுராநாயக
சர்மவிபூஷண ஸாக்ஷிசிவா ஹர (ஸாம்ப) 41

யதிஜனஹ்ருதய நிவாஸிதவீஶ்வர
விதிவிஷ்ணுவாதி ஸுஸேவ்யசிவா ஹர (ஹாம்ப) 42



ராமேஶ்வர ரமணீய முகாம்புஜ
ஸோமேஶ்வர ஸுகிருதே:சிவாஹர (ஹாம்ப) 43

லங்காதீஶ்வர ஸேவிதஸுகா
லாவண்யாம்ருத வஸிதசிவா ஹர (ஸாம்ப) 44

வரதாபயகர வாஸுகிபூஷண
வனமாலாதி விபூஷசிவா ஹர (ஸாம்ப) 45

ஶாந்தஸ்வரூபாதிப்ரிய ஸுந்தர
காந்திமதிப்ரிய காசிசிவா ஹர (ஸாம்ப) 46

ஷண்முகஜனக ஸுரேந்த்ர முனிப்ரிய
ஷாட்குண்யாதி ஸமேதசிவா ஹர (ஸாம்ப) 47

ஸம்ஸாரார்ணவ நாசனஶாஶ்வத
ஸாதுஹ்ருதப்ரிய வாஸசிவா ஹர (ஸாம்ப) 48

ஹரபுருஷோத்தம ஆனந்தாம்ருத
முராரிபுஸேவ்ய ம்ருடேசசிவா ஹர (ஸாம்ப) 49

லளிதானந்தித ஜைத்ரவிஶ்வேஶ்வர
காளிநடப்ரிய காசிசிவா ஹர (ஸாம்ப) 50

க்ஷரரூபா திப்ரியான்விதஸுந்தர
ஸாக்ஷிஜகத்ரய ஸ்வாமிசிவா ஹர (ஸாம்ப) 51

மெய்யெழுத்து முற்றிற்று.

சங்கரநாராயண திர்த்தப்ரிய
கங்காதீர ஸுவாஸசிவா ஹர (ஸாம்ப)

அக்ஷரமாலை படிப்பவர்கேட்பவர்
ஸாக்ஷி நிலையயடைந்து ஸுகிப்பர் (ஸாம்ப)

ஸாம்பஸதாசிவ ஸாம்பஸதாசிவ
ஸாம்பஸதாசிவ ஸாம்பசிவா ஹர

அக்ஷரமாலிகா ஸ்தோத்திரம் முற்றிற்று.

---

## 18. பாடுதுறை

ஸ்ரீதத்துவராய சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளியது

வெண்பா

தந்தைதா யாவானுஞ் சார்கதியிங் காவானு
மந்தமிலா வின்பநமக் காவானு—மெந்தமுயிர்
தானுகுவானுஞ் சரணுகுவானு மருட்
கோனுகு வானுங் குரு.

---

### 1. சுதந்தரன்

இரட்டைக்குறள் வெண்செந்துறை

ஏழையேற்கெளி வந்தசுதந்தரன்
எண்ணரெண்ணி லெட்டாத சுதந்தரன்
வாழுநாமுமெல்லா மடியாருடன்
மனிதனுய்வர வல்லசுதந்தரன் 1
கருதுதற்கு மெட்டாதவ னைம்புலன்
காணவேவர வல்ல சுதந்தரன்
எருதுவட்டமிட்டே கழியாவணம்
என்னையாட்கொள வல்ல சுதந்தரன். 2
மூவரோடு முப்பத்து முக்கோடிமா
முனிவருக்கு மெட்டாத சுதந்தரன்



பாவியேனளவாகி வந்தென்னையும்
பார்வைதானறப் பார்த்த சுதந்தரன். 3
சதுரிழந்தழு மன்பர்த மன்புளே
தானிருந்தழ காருஞ் சுதந்தரன்
அதிருந்தன்கழல் சென்னிவைத் தென்னையும்
அன்பரோடு வந்தாண்ட சுதந்தரன். 4

முற்றிற்று.

---

### 2. ஐயகோ



ஊடிலும் போகில னையகோ
உதறிலும் விடுகில னையகோ
பாடிலன் பழியில னையகோ
படிறுசெய் தெனைமாய்த்தா னையகோ. 1
வலியப்பிடித் தாண்டா னையகோ
வாயைப்புதைத் தாண்டா னையகோ
கலவிக்க ணூடாண்டா னையகோ
கண்ணே கண்ணுக்கண்டா னையகோ. 2

முற்றிற்று.

---

### 3. * குணலை

அடிநான்காய்த் தம்மிலோத்துவந்த இரட்டைக்குறள் வெண்செந்துறை.

மறைசொல்லும் பொருள் மனிதவேடமாய் வந்தென் றிடு குணலை, மாலுமாலுறும் பதமென் சென்னியில்

---

* குணலை = வீராவேசத்தால் கர்ச்சித்தல்.

வைத்ததென்றிடு குணலை, அறைகடற்றிரை மனமிமைப்பிலே யழிந்ததென்றிடு குணலை, அறிவுருவமா யலதுகண்டிட வரிதாய்த்தென்றிடு குணலை. 1

இறந்துபோய்வரும் வழிதூர்ந்துபுல் லெழுந்ததென்றிடு குணலை, இவ்வுடம்பொடே யிருந்துமுத்திக்கே யிருந்தோமென்றிடு குணலை, மறந்துமுன்னியு மிராதபோதமாய் வாழ்ந்தோமென்றிடு குணலை, வள்ளலாரருள் செய்தவல்லபமறவோமென்றிடு குணலை. 2

சுருதிகளொரு கோடிசொல்லியுந் தோன்றாதென்றிடு குணலை, சுரூபானந்தனோர் சொல்லிலானந்தந் தோன்றுமென்றிடு குணலை, கருதவொண்ணாத பொருளைக்கண்ணாலே கண்டோமென்றிடு குணலை, கருணையங்கழ றன்னைக்கண்டு கண் களித்தோமென்றிடு குணலை. 3

சொலவினில்வரு கலையலைவலைத் தொலைத்தோமென்றிடு குணலை, சொலவறுஞ்சுக சுரூபவாரியிற் சுகித்தோமென்றிடு குணலை, மலவுடலினின் மதிசெயும்மதி மறந்தோமென்றிடு குணலை, மதியழியவே வருமதியையு மதித்தோமென்றிடு குணலை. 4

நிரந்தரவின்ப வெள்ளமெங்கணு நிறைந்ததென்றிடு குணலை, நிகிலமென்பது மறவியுங்கூட நிகழாதென்றிடு குணலை, இருந்துபாரென்ற விரகையெப்பொழுது மியம்பி நின்றிடு குணலை, இப்படியே நாம் வாழத்தந்தானை யேத்தி நின்றிடு குணலை.

முற்றிற்று.

---



## (4) பல்லி

டி இரட்டைக்குறள் வெண்செந்துறை.

அருவுருவலானுருவ மாகிவரு மாகில்
ஆதிமறை தேடரிய வண்ணல்வருமாகில்
சுரூபனெனையுடையநல தோழன் வருமாகில்
துளக்கமற நல்லதிசை சொல்லுசிறுபல்லி. 1

ஓடுமன நம்மினுட னுறவுசெயுமாகில்
உள்ளநிலை மெள்ளவுணர் வாகிவருமாகில்
நாடுமிடமெங்குமறி வாகி விடுமாகில்
நல்லகுர நல்லதிசை சொல்லுசிறுபல்லி. 2

செப்பமுடியாதபொருள் செப்பவருமாகில்
சிலுப் பறவிழுத்தவல தீரன்வருமாகில்
இப்பவமறுத்தகழ லிங்ஙன்வருமாகில்
இன்னமொருகால் வரவு சொல்லுசிறுபல்லி. 3

ஆறவடிவைக்கவல வாதிவருமாகில்
அருஞ்சிவமெனக்கெளிய வையன்வருமாகில்
வேறுமொழியாவிரகன் வீதிவருமாகில்
மீளவொருகால் வரவு சொல்லுசிறுபல்லி. 4

இரவுபகலொழியவரு மிரவிவருமாகில்
இன்பவடிவானசிவ மிங்ஙன்வருமாகில்
விரவியெனையாளவல வீரன்வருமாகில்
மீளவொருகால் வரவு சொல்லுசிறுபல்லி. 5

என்னுளமிழ்தூறிநிறை யின்பம்வருமாகில்
என்றுமொழியாதபர மேசன்வருமாகில்
மன்னுமுணர்வாகிய மணாளன்வருமாகில்
வாழவொருகால் வரவு சொல்லுசிறுபல்லி. 6

உம்பர்கடமக்கரிய வும்பன்வருமாகில்
உரையுணர்விறந்தவுணர் வுருவன்வருமாகில்
எம்பரமறத்திக்ழு மின்பம்வருமாகில்
இன்னமொருகால் வரவு சொல்லுசிறுபல்லி. 7

முற்றிற்று.

---

## (5) அறிவு

### இரட்டைக்குறள் வெண்செந்துறை

போகாதமாயையைப் போக்கிட லாவதும்
புண்ணியபாவம் புறத்திடலாவதும்
ஆகாதழியா திருந்திட லாவதும்
அறிவேவடிவா யிருந்திடினல்லவோ. 1

என்னிலே யாவையுங் கண்டிடலாவதும்
யாவையுளென்னையுங் கண்டிடலாவதும்
அன்னியங்கண்டிலோ மென்றிடலாவதும்
அறிவேவடிவா யிருந்திடினல்லவோ. 2

மோகாதியெல்லா முறிந்திடலாவதும்
முற்றுமுற்கன்மங்க ளற்றிடலாவதும்
ஆகாதழியா திருந்திடலாவதும்
அறிவேவடிவா யிருந்திடினல்லவோ. 3

இந்தப் பிறப்பினின் றேறிடலாவதும்
ஏகாந்தமாகி யிருந்திடலாவதும்
அந்தக்கரண மறுத்திட லாவதும்
அறிவேவடிவா யிருந்திடினல்லவோ. 4

நற்செய்தவங்களு மற்றிடலாவதும்
நானெனு மாங்கார நச்சறலாவதும்



அற்சனையெல்லா மறவிடலாவதும்
அறிவேவடிவா யிருந்திடினல்லவோ. 5

முற்றிற்று.

---

## (6) ஆத்மானுபவத்தின் அருமையுரைத்தல்

### அடியிரண்டாய்த் தம்மிலோத்துவந்த குறள்வெண்செந்துறை

நான்மறையோதிப் பொருளுரைத்து
நாடறியக்கல்வி சாற்றினாலும்
தானதுவாகை யரிதுகாணும்
சலிப்பற நிற்கை யரிதுகாணும். 1

இணங்காமை யெல்லா மறத்துறந்தே
இருட்டற வேதாந்த மோதினாலும்
பிணங்காதிருக்கை யரிதுகாணும்
பேரின்பமாகை யரிதுகாணும். 2

எல்லையிலாகம மேறவோதி
ஏதுக்களெல்லா மியம்பினாலும்
அல்லலறுக்கை யரிதுகாணும்
அறிவாயிருக்கை யரிதுகாணும். 3

பற்றறவிட்டுத் தலைபறித்துப்
பாணியைப்பண்ணிப் பயின்றக்காலும்
முற்றநிலைநிற்கை யரிதுகாணும்
முடியநிலைநிற்கை யரிதுகாணும். 4

ஆறுசமயப் பொருளுங்கற்றே
அங்குள்ளதர்க்கங்கள் சாற்றினாலும்
ஆறியிருக்கை யரிதுகாணும்
அதுவிதுவாகை யரிதுகாணும். 5

வேறுபிறிதிலா மெய்ம்மைதன்னை
வித்தாரமாக விளம்பினாலும்
ஆறியிருக்கை யரிதுகாணும்
அவிரோதமாகை யரிதுகாணும். 6

தேறியுலக மனைத்தினையும்
சிற்பரமாக நாஞ்செப்பினாலும்
ஆறியிருக்கை யரிதுகாணும்
அவிரோதமாகை யரிதுகாணும். 7

முற்றிற்று.

---

## (7) *வளவியுடன் படுத்தல்

ஷை குறள் வெண்செந்துறை.

இமைத்து விழிப்பதற்கில்லை வாணாள்
இதிலுள்ள துன்பங்க ளெண்ணில்கோடி
அமைத்துனைப்பார்த் தல்லலறுநெஞ்சே
ஆண்டவனென்றென் றரற்றவாரீர். 1

மின்னினுநொய்திவ் வுடம்பின்றன்மை
மேன்மேலும் வந்திடும்வேதனைகள்
அன்னதேயிவ்வுடம் பாவதானால்
ஆய்வானை யெப்போது மாயவாரீர். 2

இல்லாதுவேண்டினும் வந்திசையா
உள்ளதுதள்ளினு மூட்டுமானால்
எல்லாம்வரக்கண்டோ ரிச்சையின்றி
இருந்தபடியே யிருக்கவாரீர். 3

* வளவி — வீட்டிறப்பு.



என்னாணைகேளிஃதொன்று நெஞ்சே
ஏதேனுஞ் செய்தினி யுள்ளகாலம்
தன்னாக நாயோமை யாண்டுகொண்ட
தாள்களையோவாது சாற்றவாரீர். 4

பொன்றுமுடம்பு பொருந்துமின்பம்
புன்றுணை நீராகும் புன்மை நெஞ்சே
என்றபினெல்லாம் வீழவிட்டே
இருந்தபடியே யிருக்கவாரீர் 5

ஒன்றெனிலாயிர கோடிதுன்பம்
ஓய்வின்றியேவரு மோரினெஞ்சே
ஒன்று மற்றுள்ள நாமாயிருந்தே
உளநாள்கழிக்க வொருப்படீரே. 6

முற்றிற்று

---

## (8) * மனோரதம்.

ஷை குறள் வெண்செந்துறை

முகுந்தனு நாலுமுகனுந் தேட
மூலமொருகுரு மூர்த்தியாகிப்
புகுந்தடியார்தொழ வீற்றிருக்கும்
பூங்கோயிலாக நான் பெற்றிலேனே 1

மறைகளு மென்று மறிவரிய
மலரடிகண்டு நான்வாழும் வண்ணம்
இறைவனார் தன்றிருக் கோயிறன்னில்
ஏதேனுமொன்றாகப் பெற்றிலேனே 2

* மனோரதம் = இச்சை, விருப்பம்.

பாசங்கள்வேரைப் பறிக்கும்வண்ணம்
பலிக்கென்று பேரிட்டுப் பையப்பையத்
தேசிகனார்தா மெழுந்தருளும்
திருவீதியாக நான்பெற்றிலேனே. 3

உள்ளூறு நோய்கண மொன்றின்மாற்றும்
ஒப்பிலானந்தரை யுள்ளுதோறும்
அள்ளூறு சிந்தையார் கண்சொரியும்
ஆனந்தக்கண்ணீர் நானாக்கிலேனே 4

பாமாலைகொண்டு தனையருளப்
பாவியேன்கண்காணப் பாரில்வந்த
சீமான் புகழ்கேட்க வாகமெங்கும்
செவியாய்த் திகழ்ந்திடப் பெற்றிலேனே 5

அச்சந் தவிர்த்தென்னை யாண்டுகொண்ட
அருளைநினைதொறு மன்புகூற
உச்சிதொடங்கி யடியளவும்
உளமாயிருக்க நான் பெற்றிலேனே. 6

கருவேலையுள்விழுந் தாழுமென்னைக்
கண்டஞ்சலென்று வந்தாண்டுகொண்ட
அருண்மேனிகாண வனந்தகோடி
ஆகத்திற் கண்ணாகப் பெற்றிலேனே. 7

அவமே பிறந்திறந் தாழுமென்னை
ஆழாமலஞ்சலென் றாண்டுகொண்ட
தவராசனைப் பாடிட மயிர்க்கால்
தானெல்லாம் வாயாகப் பெற்றிலேனே.

போதந் திரண்டருண் மேனியாகிப்
புலையேனையாளப் புவியில்வந்த



பாதமணமுண்டு வாழநாசி
பதினாயிரங்கோடி பெற்றிலேனே. 9

கழலிணையாவருங் காணவந்த
காரணனார் தாமெழுந்தருளும்
பழவடியார்திரு வாசரேறும்
படியாய்க்கிடக்க நான் பெற்றிலேனே. 10

முற்றிற்று.

---

## (9) குருவின் ஏவலுக்கிசையாக் கரணத்திகழ்ச்சி

அடிநான்காய்த் தம்மிலோத்துவந்த இரட்டைக்குறள்
வெண்செந்துறை.

ஓவாதே பிறந்திறந்துழிதரு மென்னை
ஓகோவென் றருள்செய்யு மொளியாருஞ் சுரூபன்
தேவாநற் றிருமேனி திளையாதகண்கள்
அவையெல்லாம் கண்ணல்லசெந்நீர்பாய் புண்ணே.

தடையில்லைத் திருவாசல் சகலமுஞ்சுரக்கும்
தன்னையே தரவல்ல தலைவள்ளல் சுரூபன்
ஓடிவறக் கொடிகட்டி யிருக்கவு முயிர்கள்
ஓடிவந்தடையாத வுணர்வின்மை யென்னே. 2

கல்லாத முழுதையுங் கற்பித்தோர் மொழியால்
கடையோமைப் பொருளாகக் கடைக்கண் வைத்[தளித்த
வல்லாளன் சுரூபன்சீர் நினையாத மனந்தான்
வன்பாறை யிரும்பன்று வலிதீது வலிதே. 3

முற்றிற்று.

---

காப்பு

இஃது சுருபானந்த சுவாமிகள் மேல்

வேண்பா

அடியேனை யாள வருண்மேனி சாத்திப்
படிமீது வந்த பரனே—கொடியேனென்
றெண்ணு திமைப்பளவி லிங்ஙனே வீடளித்த
கண்ணு கடைபோகக் கா.

பாடுதுறை—முற்றிற்று.

---

## 19. திருவாசகம்.

ஸ்ரீ மாணிக்கவாசகசுவாமிகளருளியது

நூற்சிறப்பு

தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே—யெல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவாசக மென்னுந் தேன்.

### சிவபுராணம்

சிவனதனுதி முறைமையான பழமை

திருப்பெருந்துறையிலருளிச்செய்யப்பட்டது.

திருச்சிற்றம்பலம்

நமச்சிவாய வாஅழ்க நாதன்றாள்வாழ்க
இமைப்பொழுது மென்னெஞ்சில் நீங்காதான்றாள்வாழ்க
கோகழியாண்ட குருமணிதன் றாள்வாழ்க
ஆகமமாகிநின் றண்ணிப்பான் றாள்வாழ்க



ஏகன் அனேகன் இறைவனடிவாழ்க
வேகங்கெடுத்தாண்ட வேந்தனடிவெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவாருண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன்கழல் வெல்க
ஈசனடிபோற்றி யெந்தையடிபோற்றி
தேசனடிபோற்றி சிவன்சேவடிபோற்றி
நேயத்தேநின்ற நிமலனடிபோற்றி
மாயப்பிறப்பறுக்கும் மன்னனடிபோற்றி
சீரார்பெருந்துறைநந் தேவனடிபோற்றி
ஆராதவின்ப மருளுமலைபோற்றி
சிவனவனென் சிந்தையுள்நின்றவதனால்
அவனருளாலே யவன்றாள்வணங்கிச்
சிந்தைமகிழச் சிவபுராணந்தன்னை
முந்தைவினைமுழுது மோயவுரைப்பனியான்
கண்ணுதலான் றன்கருணைக் கண்காட்டவந்தெய்தி
எண்ணுதற்கெட்டா வெழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய்விளங்கொளியாய்
எண்ணிறந்தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லாவினையேன் புகழுமாறொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவரசங்கமத்துள்
எல்லாப்பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்

மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்றுவீடுற்றேன்
உய்யவென்னுள்ளத்துள் ஓங்காரமாய்நின்ற
மெய்யாவிமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயாவெனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமானனாம்விமலா
பொய்யாயினவெல்லாம் போயகலவந்தருளி
மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானமில்லாதே னின்பப்பெருமானே
அஞ்ஞானந்தன்னை யகல்விக்கு நல்லறிவே
ஆக்கமளவிறுதி யில்லாயனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருடருவாய்
போக்குவாயென்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பி
னாற்றத்தினேரியாய்ச் சேயாய் நணியானே
மாற்றமனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற்போலச்
சிறந்தடியார்சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்தபிறப்பறுக்கு மெங்கள்பெருமான்
நிறங்களோரைந்துடையாய் விண்ணோர்களேத்த
மறைந்திருந்தாயெம்பெருமான் வல்வினையேன்றன்னை
மறைந்திடமூடிய மாயவிருளை
அறம்பாவமென்னும் அருங்கயிற்றாற்கட்டிப்
புறந்தோல்போர்த்தெங்கும் புழுவழுக்குமூடி
மலஞ்சோருமொன்பது வாயிற்குடிலை
மலங்கப்புலனைந்தும் வஞ்சனையைச்செய்ய
விலங்குமனத்தால் விமலாவுனக்குக்
கலந்தவன்பாகிக் கசிந்துள்ளுருகும்
நலந்தானிலாத சிறியேற்குநல்கி



நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள்காட்டி
நாயிற்கடையாய்க்கிடந்த வடியேற்குத்
தாயிற்சிறந்த தயவானதத்துவனே
மாசற்றசோதி மலர்ந்தமலர்ச்சுடரே
தேசனேதேனார் அமுதேசிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்குமாரியனே
நேசவருள்புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்
பேராதுநின்ற பெருங்கருணைப் பேராறே
ஆராவமுதே யளவிலாப் பெம்மானே
ஓராதாருள்ளத் தொளிக்கு மொளியானே
நீராயுருக்கியென் ஆருயிராய் நின்றானே
இன்பமுந் துன்பமும் இல்லானேயுள்ளானே
அன்பருக்கன்பனே யாவையுமா யல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே தோன்றாப்பெருமையனே
ஆதியனேயந்த நடுவாகி யல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தைபெருமானே
கூர்த்தமெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார்தங்கருத்தி
னோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங்காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்பவெள்ளமே அத்தா மிக்காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்
தேற்றனேதேற்றத் தெளிவே யென்சிந்தனையுள்
ஊற்றானவுண்ணா ரமுதேயுடையானே
வேற்றுவிகார விடக்குடம்பினுட்கிடப்ப
ஆற்றேனெம்மையா அரனேயோ வென்றென்று

போற்றிப்புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்குவந்து வினைப்பிறவிசாராமே
கள்ளப்புலக்குரம்பை கட்டழிக்கவல்லானே
நள்ளிருளினட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட்கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லல்பிறவி யறுப்பானே யோவென்று
சொல்லற்கரியானைச் சொல்லித்திருவடிக்கீழ்ச்
சொல்லியபாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப்பணிந்து.

திருச்சிற்றம்பலம்.

திருவாசகம் - சிவபுராணம் முற்றிற்று.

---

மஹேஸ்வரபூஜை முடிந்தபின் சொல்லவேண்டுவன.

கொண்டுவந்து மனைப்புகுந்து
குலாவு பாதம் விளக்கியே
மண்டு காதலி னாதனத்திடை
வைத்தருச்சனை செய்தபின்
உண்டிநாலு விதத்திலாறு
சுவைத் திறத்தினி லொப்பிலா
அண்டர் நாயகர் தொண்டரிச்சையி
லமுதுசெய்ய அளித்துளார். 1

மண்ணினிற் பிறந்தார் பெரும்பயன் மதிசூடும்
அண்ணலாரடி யார்தமை யமுது செய்வித்தல
கண்ணினாலவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்
உண்மையாமெனி னுலகர்முன் வருகென வுரைப்பார்.



அல்லார் கண்டத் தண்டர்பிரா
னருளாற்பெற்ற படிக்காசு
பல்லாறியன்ற வளம் பெருகப்
பரமனடியா ரானார்கள். 3

எல்லாமெய்தி யுண்கவென
இரண்டுபொழுதும் பறைநிகழ்த்திச்
சொல்லாற் சாற்றிச் சோறிட்டார்
துயர்கூர் வறுமை தொலைத்திட்டார். 3

தனிவெள் விடைமேல் நெடுவிசும்பிற்
றலைவர் பூத கணநாதர்
முனிவரமரர் விஞ்சையர்கள்
முதலாயுள்ளோர் போற்றிசைப்ப
இனியகறியுந் திருவமுது
மமைத்தார் காண எழுந்தருளிப்
பணிவெண்டிங்கள் முடிதுளங்கப்
பரந்த கருணை நோக்களித்தார். 4

முற்றிற்று.

---

## 20. திருத்தாண்டகம்.

அரியானை யந்தணர்தஞ் சிந்தையானை
யருமறையினகத்தானை யணுவையார்க்குந்
தெரியாததத்துவனைத் தேனைப்பாலைத்
திகழொளியைத் தேவர்கடங்கோனை மற்றைக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்
கனைகடலைக் குலவரையைக் கலந்து நின்ற

பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவாநாளே. 1

நாரணன்காண் நான்முகன்காண் நால்வேதன்காண்
ஞானப் பெருங்கடற்கோர் நாவாயன்ன
பூரணன்காண் புண்ணியன்காண் புராணன்றான்காண்
புரிசடைமேற் புனலேற்ற புனிதன்றான்காண்
சாரணன்காண் சந்திரன்காண் கதிரோன் றான்காண்
தன்மைக்கட்டானே காண்டக்கோர்க்கெல்லாங்
காரணன்காண் காளத்திகாணப்பட்ட
கணநாதன்கா ணவனென் கண்ணுளானே. 2

நிலைபெறுமா றெண்ணுதியே னெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில்புக்குப்
புலர்வதன் முன்னலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துபாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச்
சங்கரா சயபோற்றி போற்றியென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடை யெம்மாதியென்று
மாரூரா வென்றென்றேயலறா நில்லே. 3

திருவேயென் செல்வமே தேனேவானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர் நற்சோதிமிக்க
வுருவே யென்னுறவே யென்னூனேயூனி
னுள்ளமே யுள்ளத்தினுள்ளே நின்ற
கருவே யென்கற்பகமே கண்ணே கண்ணிற்
கருமணியே மணியாடுபாவாய் காவா
யருவாயவல்வினைநோ யடையாவண்ணம்
மாவடுதண்டுறையுறையு மமரரேறே. 4



பேராயிரம்பரவி வானோரேத்தும்
பெம்மானைப் பிரிவிலாவடியார்க்கென்றும்
வாராதசெல்வம் வருவிப்பானை
மந்திரமுந்தந்திரமு மருந்துமாகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான்றன்னைத்
திரிபுரங்க டீயெழத்திண் சிலைகைக்கொண்ட
போரானைப் புள்ளிருக்கும் வேளூரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கினேனே. 5

எத்தாய ரெத்தந்தை யெச்சுற்றத்தா
ரெம்மாடு சும்மாடாமேவர் நல்லார்
செத்தால் வந்துதவுவா ரொருவரில்லைச்
சிறுவிறகாற் றீமூட்டிச் செல்லாநிற்பர்
சித்தாய வேடத்தாய் நீடு பொன்னித்
திருவானைக்காவுடைய செல்வாவென்ற
னத்தாவுன் பொற்பாதமடையப் பெற்றா
லல்லகண்டங் கொண்டடியே னென்செய்கேனே. 6

சிவனாகித் திசைமுகனாய்த் திருமாலாகிச்
செழுஞ்சுடராய்த் தீயாகி நீருமாகிப்
புவனாகிப் புவனங்களனைத்துமாகிப்
பொன்னாகி மணியாகி முத்துமாகிப்
பவனாகிப் பவனங்களனைத்துமாகிப்
பசுவேறித் திரிவானோர்பவனாய்நின்ற
தவனாய தலையாலங் காடன்றன்னைச்
சாராதே சாலநாள் போக்கினேனே. 7

அப்பனீ யம்மைநீ யையனுநீ
யன்புடைய மாமனு மாமியுநீ

யொப்புடைய மாதருமொண் பொருளுநீ
யொருகுலமுஞ் சுற்றமு மோரூருநீ
துய்ப்பனவு முய்ப்பனவுந் தோற்றுவாய்நீ
துணையாயென் னெஞ்சந் துறப்பிப்பாய்நீ
யிப்பொன்நீ யிம்மணிநீயிம் முத்துநீ
யிறைவனீயே றூர்ந்த செல்வனீயே. 8

குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும்பொல்லே
குற்றமே பெரிதுடையேன் கோலமாய [ன்
நலம்பொல்லே னுன்பொல்லேன் ஞானியல்லே
னல்லாரோடிசைந்திலே னடுவேனின்று
விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தே னல்லேன்
வெறுப்பனவு மிகப்பெரிதும் பேசவல்லேன்
இலம்பொல்லே னிரப்பதே யீயமாட்டே
னென்செய்வான் றோன்றினேனேழையேனே 9

மைப்படிந்தகண்ணாளுந் தானுங்கச்சி
மயானத்தான்வார் சடையானென்னினல்லா
னொப்புடையனல்ல னொருவனல்ல னோரூர
னல்லனோ ருவமையில்ல
னப்படியு மந்நிறமு மவ்வண்ணமு
மவனருளே கண்ணாகக் காணினல்லா
லிப்படிய னிந்நிறத்த னிவ்வண்ணத்த
னிவனிறைவனென் றெழுதிக் காட்டொணாதே.

திருச்சிற்றம்பலம்

திருத்தாண்டகம் முற்றிற்று.

---



திருச்சிற்றம்பலம்.

படமுடியா தினித்துயரம் படமுடியா தரசே!
பட்டதெல்லாம் போதுமிந்தப் பயந்தீர்த்திப் பொழுதென்
உடலுயிரா தியவெல்லாம் நீயெடுத்துக் கொண்டுன்
உடலுயிராதிய வெல்லா முவந்தெனக்கே யளிப்பாய்
வடலுறு சிற்றம்பலத்தே வாழ்வாயென் கண்ணுண்
மணியே யென்குரு மணியே மாணிக்க மணியே!
நடனசிகா மணியே யென் நவமணியே ஞான
நன்மணியே பொன்மணியே நடராஜ மணியே!

---

திருச்சிற்றம்பலம்.

---

## 21. * உயிரேழுத்துச் சிவநாமாவளி.

[ஸ்ரீமத் : ப. கு. சின்னைய பிள்ளையவர்க ளியற்றியது]

### அ

அரகர சிவசிவ — சிவமயமே
அம்பிகை பாகா — சிவமயமே
புரமூன் றெரித்தோய் — சிவமயமே
பூசுரர்க் கருள்வோய் — சிவமயமே
நரகரி துதித்தோய் — சிவமயமே
நான்மறைப் பொருளே — சிவமயமே
திரிநேத் திரவோம் — சிவமயமே
தீனத யாளா — சிவமயமே 1.

### ஆ

ஆகம முதலோய் — சிவமயமே
அரவா பரணா — சிவமயமே
பாகம்பெண் ணுடையாய் — சிவமயமே
பக்தியுள் படிவோய் — சிவமயமே
சோக மொழிப்போய் — சிவமயமே
சுந்தரா னந்தா — சிவமயமே
மோக மறுப்பாய் — சிவமயமே
முத்தியின் விளைவே — சிவமயமே 2.

* இந்நாமாவளி பிலவங்க (1907) வருஷம் ஆனிமாதத்தில் சேலம்-சுகவனேஸ்வர ஸ்வாமி ஆனித்திருமஞ்சன ஆருத்திரா தரிசனத்தன்று அச்சியற்றி அடியார்கட்கு வழங்கப் பெற்றது.



### இ

இந்துவைத் தரித்தோய் — சிவமயமே
இகபர மளிப்போய் — சிவமயமே
கந்தனை யீன்றோய் — சிவமயமே
கருணையங் கடலே — சிவமயமே
நந்திவா கனவோம் — சிவமயமே
நால்வருக் கருள்வோய் — சிவமயமே
வந்தெனை யாள்வாய் — சிவமயமே
வானவர் தொழுவோய் — சிவமயமே 3.

### ஈ

ஈமத் தாடியவோம் — சிவமயமே
எரிமழு கரத்தோய் — சிவமயமே
சோம சுந்தரா — சிவமயமே
தொல்வினை களைவோய் — சிவமயமே
ஏமனை யுதைத்தோய் — சிவமயமே
என்னுயிர்த் துணையே — சிவமயமே
காம தகனவோம் — சிவமயமே
கைலையின் வாசா — சிவமயமே 4.

### உ

உத்தமப் பொருளே — சிவமயமே
உளமதில் நிறைவோய் — சிவமயமே
சித்தர் தமக்கருள் — சிவமயமே
தேசிக வடிவே — சிவமயமே
பத்தர்க ளகமே — சிவமயமே
பவமறுப் பவனே — சிவமயமே

கீர்த்தன மாடிய சிவமயமே
நின்மல சொரூபா சிவமயமே 5

## ஊ

ஊனம தில்லாய் சிவமயமே
உலகிய லொழிப்போய் சிவமயமே
ஞானம தருள்வோய் சிவமயமே
நாத நாதாந்தா சிவமயமே
தீனதயாளா சிவமயமே
சிற்பரப் பொருளே சிவமயமே
மோனப் பொருளே சிவமயமே
முருகனை ஈன்றோய் சிவமயமே 6.

## எ

எந்தனைக் காப்பாய் சிவமயமே
எரிவிழி யுடையாய் சிவமயமே
பந்தம தறுப்பாய் சிவமயமே
பார்வதி கணவா சிவமயமே
வந்தனை ஏற்பாய் சிவமயமே
வல்வினை தீர்ப்பாய் சிவமயமே
அந்திவண்ணவோம் சிவமயமே
அனந்த சற்குணனே சிவமயமே 7.

## ஏ

ஏற்று வாகனு எம்பெருமானே சிவமயமே
போற்றுதற் கெளியாய் சிவமயமே
புலியுரி யுடையாய் சிவமயமே
ஆற்றினை யணிந்தோய் சிவமயமே
அம்புவி யளித்தோய் சிவமயமே



தோற்றிடும் பொருளே சிவமயமே
சுடரொளி யானே சிவமயமே 7.

## ஐ

ஐயமேற் றுண்டோய் சிவமயமே
ஆனந்தத் தெளிவே சிவமயமே
செய்வினை தீர்ப்போய் சிவமயமே
செஞ்சடை யோனே சிவமயமே
பையர வணிந்தோய் சிவமயமே
பரமத யாளா சிவமயமே
துய்யவெண்ணீற்றாய் சிவமயமே
துலங்குமுப் படையாய் சிவமயமே 9.

## ஒ

ஒப்புர வுடையோய் சிவமயமே
ஓதுவ ருளத்தோய் சிவமயமே
முப்புர மெரித்தோய் சிவமயமே
மூலகா ரணனே சிவமயமே
அப்பணி சடையோய் சிவமயமே
அருவுரு வோனே சிவமயமே
தற்பரப் பொருளே சிவமயமே
தனிமுதற் பொருளே சிவமயமே 10.

## ஓ

ஓதுமைந் தெழுத்தோய் சிவமயமே
உயர்பிர ணவமே சிவமயமே
மாதுமை பாகா சிவமயமே
மணிமிடற் றோனே சிவமயமே

சாதுக்க ளிடத்தோய் சிவமயமே
சம்போ சங்கர சிவமயமே
பாதுகாத் தருள்வாய் சிவமயமே
பங்கயன் றெழுவோய் சிவமயமே 11.

## ஔ

ஔவிய மறுப்போய் சிவமயமே
அநந்தகல் யாண சிவமயமே
திவ்ய குணளா சிவமயமே
தில்லை நடேசா சிவமயமே
மௌனதே சிகவோம் சிவமயமே
மாசிலா மணியே சிவமயமே
நவ்வியங் கரத்தோய் சிவமயமே
நாயேனை யாள்வோய் சிவமயமே 12.

திருச்சிற்றம்பலம்.

மாற்றறியாத செழும்பசும் பொன்னே
மாணிக்கமே சுடர் வண்ணக்கொழுந்தே
கூற்றறியாத பெருந்தவ ருள்ளக்
கோயிலிருந்த குணப் பெருங்குன்றே
வேற்றறியாதசிற் றம்பலக் கனியே
விச்சையில் வல்லவர் மெச்சுவிருந்தே
சாற்றறியாதவென் சாற்றுங் களித்தாய் !
தனிநட ராஜவென் சற்குரு மணியே !

திருச்சிற்றம்பலம்.

உயிரெழுத்துச் சிவநாமாவளி முற்றிற்று.

---



## 22. நால்வர் மகிமை.

### 1. சம்பந்தர்

புனலிலேடெதிர் செல்லெனச் செல்லுமே
புத்தனுர்தலை தத்தெனத் தத்துமே
கனலிலேடிடப் பச்சென் றிருக்குமே
கதவுமாமறைக் காட்டி லடைக்குமே
பனையிலாண்பனை பெண்பனை யாகுமே
பழையவென்பு பொற்பாவைய தாகுமே
சினவராவிடந் தீரெனத் தீருமே
சிறந்த சம்பந்தர் செந்தமிழ்ப்பாடலே.

### 2. அப்பர்

தலைகொணஞ்சமு தாக விளையுமே
தழலினீறு தடாகம தாகுமே
கொலைசெயானை குனிந்து பணியுமே
கூரராவிடந் தீரெனத் தீருமே
கலைகொள்வேத வனப்பதி தன்னுளே
கதவுமீண்டு கடுகத் திறக்குமே
அலைகொள் வாரியிற் கல்லுமிதக்குமே
அப்பர்போற்று மருந்தமிழ்ப்பாடலே.

### 3. சுந்தரர்.

வெங்கராவுண்ட பிள்ளையை நல்குமே
வெள்ளைவாரண மீதி லிருத்துமே
மங்கைபாகரைத் தூது நடத்துமே
மருவியாறு வழிவிட்டு நிற்குமே

செங்கலானது தங்கம தாகுமே
திகழுமாற்றிட்ட செம்பொ னளிக்குமே
துங்கவாம்பரி சேரற்கு நல்குமே
துலங்கு நாவலூர்ச் சுந்தரர்பாடலே.

## 4. வாதவூரர்.

பெருகும் வையை தனையழைப் பிக்குமே
பிரம்படிக்குப் பிரான்மேனி கன்றுமே
நரியெலாம்பரி யாக நடத்துமே
நாடிமூகை தனைப் பேசுவிக்குமே
பரிவிற் பிட்டுக்கு மண்சுமப் பிக்குமே
பரமனே டெழுதக் கோவை பாடுமே
வருகும்புத்தரை வாதினில் வெல்லுமே
வாதவூரர் வழங்கிய பாடலே.

நால்வர் மகிமை முற்றிற்று.

வணக்கம்

ஆனைமுகத் தனையாறு முகத்தனை யைம்முகத்தனைப்பாலவளைப் பூதச், சேனைமுகத் தலைவனைச் சண்டேசுரனைக் கவுணிய கோத்திரநங் கோவைச், சோனைமுகத் தருள்திருத்தாண் டகம்புணைந்த வப்பனைவன் றொண்டத் தேவை, வானைமுகத் தவர் வழுத்தும் வாதவூ ரடிகளையாம் வணக்கஞ் செய்வாம்.

—



## 23. நால்வர் துதி

### 1. சம்பந்தர்

கடியவிழ் கடுக்கை வேணித்தாதைபோற் கனற்கண்மீனக்
கொடியனைவேவ நோக்கிக் குரையிரந் தனையான்கற்பிற்
பிடியன நடையாள் வேண்டப்பின் னுயிரளித்துக்காத்த
முடியணி மாடக்காழி முனிவனை வணக்கஞ் செய்வாம்.

### 2. அப்பர்

அறப்பெருஞ் செல்விபாகத் தண்ணலைந் தெழுத்தாலஞ்சா
மறப்பெருஞ் செய்கைமாறு வஞ்சக ரிட்டநீல
நிறப்பெருங் கடலும்பார்க்கு நீந்துதற் கரியவேழு
பிறப்பெனுங் கடலுநீத்த பிரானடி வணக்கஞ்செய்வாம்.

### 3. சுந்தரர்

அரவக லல்குலார்பா லாசைநீத் தவர்க்கேவீடு
தருவமென் றளவில்வேதஞ் சாற்றியதலைவன் றன்னைப்
பரவைதன் புலவிதீர்ப்பான் கழுதுகண் படுக்கும்பானு
ளிரவினிற் றாது கொண்டோ னிணையடி முடிமேல்வைப்பாம்.

### 4. மாணிக்கவாசகர்

எழுதரு மறைகடேறு மிறைவனை யெல்லிற்கங்குற்
பொழுதறு காலத்தென்றும் பூசனைவிடாது செய்து
தொழுதகை தலைமேலேறத் துளும்புகண் ணீருண்மூழ்கி
யழுதடி யடைந்தவன்ப னடியவர்க் கடிமைசெய்வாம்.

திருச்சிற்றம்பலம்

நால்வர்துதி முற்றிற்று.

---

## 24. திருநீற்றுமகிமை

மந்திரமாவதுநீறு வானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறு துதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவதுநீறு சமயத்திலுள்ளதுநீறு
செந்துவர்வாயுமைபங்கன் றிருவாலவாயான் றிருநீறே.

பிணியெலாம் வரினுமஞ்சேன் பிறப்பினோ டிறப்புமஞ்சேன்
துணிநிலாவணி யினான்றன் றொழும்பரோ டழுந்தியம்மால்
திணிநிலம் பிளந்துங்காணாச் சேவடிபரவி வெண்ணீ
றணிகிலா தவரைக்கண்டா லம்மநாமஞ் சுமாறே. 2.

கங்காளன் பூசுங் கவசத்திருநீற்றை
மங்காமற்பூச மகிழ்வீரேயாமாகில்
தங்காவினைகளுஞ் சாருஞ்சிவகதி
சிங்காரமான திருவடி சேர்வரே. 3.

மாலேந்திய குழலார் தருமயல்போ மிடரயல்போங்
கோலேந்திய வரசாட்சியுங் கூடும் புகழ்நீடும்
மேலேந்திய வானாடர்கண் மெலியாவிதமொருசெவ்
வேலேந்திய முருகாவென வெண்ணீறணிந்திடிலே 4.



தவமுண்மையொடுறும் வஞ்சகர்தஞ்சார்வது தவறும்
நவமண்மிய வடியாரிட நல்குந்திறன்மல்கும்
பவனன்புனல்கனன் மண்வெளிபலவாகிய பொருளாஞ்
சிவசண்முகவெனவே யருட்டிருநீ றணிந்திடிலே. 5.

பத்தியொடு சிவசிவா வென்று திருநீற்றைப்
பரிந்து கையாலெடுத்துப்
பாரினில் விழாதபடி யண்ணாந்து செவியொடு
பருத்த புயமீதி லொழுக
நித்த மூ விரல்களால் நெற்றியிலழுந்தவுற
நினைவாய்த் தரிப்பவர்க்கு
நீடுவினை யணுகாது தேகபரிசுத்தமாம்
நீங்காம னிமலனங்கே
சத்தியொடு நித்தம் விளையாடுவன் முகத்திலே
தாண்டவஞ் செய்யுந் திரு
சஞ்சலம் வராது பரகதியுதவு மிவரையே
சத்தியுஞ் சிவனென்னலாம்
மத்தினிய மேருவென வைத்தமுதினைக் கடையு
மால்மருகனான முருகா
மயிலேறி விளையாடு குகனேபுல்வயனீடு
மலைமேவு குமரேசனே.

திருச்சிற்றம்பலம்

திருநீற்று மகிமை முற்றிற்று. 6.

---



சிதம்பரம் இராமலிங்கசுவாமிகள்.

வாழையடி வாழையென வந்ததிருக்கூட்ட மரபினில்
யானொருவ னன்றோ வகையறியேனிந்த, ஏழைபடும் பாடுனக்
குந் திருவுளச் சம்மதமோ இதுதகுமோ இதுமுறையோ
இதுதருமந்தானோ, மாழைமணிப் பொது நடஞ்செய் வள்
ளால்யானுனக்கு மகனலனோ நீயெனக்கு வாய்த்த தந்தை
யலையோ, கோழையுல குயிர்த்துயர மினிப்பொறுக்க மாட்
டேன் கொடுத்தருள் நின் அருளொளியைக் கொடுத்தருளிப்
பொழுதே!

உ

சிவமயம்

திருப்பேரூர்

ஸ்ரீமத் சாந்தலிங்க சுவாமிகள்

அருளிய

# வைராக்கியசதகம் தோத்திரம்

மூலமும்,

ஸ்ரீ கோவிலூர் - சங்கரானந்த சுவாமிகள்

இயற்றிய

உரையும்.

---

உ

சிவமயம்

# சிறப்புப் பாயிரம்.

ஸ்ரீ காசிவாசி கோவிலூர்

வீர-சிவானந்த ஞான தேசிகேந்திர சுவாமிகள்

அருளிய

நேரிசை வெண்பா.

வீடுமருள் சாந்தலிங்கன் மெய்ந்நூல்க ளொன்கினுமே
பீடுபெறு நற்சதகப் பிற்பாதி—யீடகன்ற
தோத்திரத்திற் கோருரையைச் சொற்றனனற் சங்கரனுஞ்
சாத்திரத்திற் சீரறிஞன் றான்.

---

உ

"கருணீக மித்திரன்"

துணைப் பத்திராதிபரும்

சென்னை மாகாண கருணீக சங்க உப அக்கிராசனாதிபதியும்

"சிறுமறை" என்னும் குட்டிக்குறள் ஆசிரியரும்

தருமபுரி உயர்தரப் பாடசாலையின் தனித்தமிழ்ப்

போதகா சிரியரும்,

காம்பீலிச் சீர் கருணீகருமாகிய

## திரு. சுகவனம் - சிவப்பிரகாசம் பிள்ளை

அவர்கள் அளித்த

### கலி நிலைத்துறை.

உலக மோங்குபு திருவருள் வழங்கிய வொருவன்
இலகு மாந்தரி னெழிலுரு வுறீஇப்புகுந் திவணே
சுலவு பாந்தமெ னிருள்கெடப் பேரையிற் றோன்றும்
தலைவ னுங்குரு சாந்தலிங் கேசனுஞ் சதுரன். (1)

பன்னு சாத்திரங் கொலைமறுத் திடுநனூல் பாரின்
மன்னு நேத்திர மணியவை ராக்கிய சதகம்
சின்ன மோவுவை ராக்கிய தீபமாந் தென்னூல்
நன்ன ரோதவி ரோதவுந் தியதெனு நான்கே. (2)

அருமை வாய்மலர்ந் துளவவை தருபொரு ளடியார்க்
கொருமை யேய்ந்திட வியல்வது கருதிய வுளத்தாற்
பெருமை யாய்ந்துரை விரித்தனன் பிறங்குசீர் வைப்பிற்
றருமை யோங்கிய திருப்போரூர்ச் சிதம்பரத் தக்கோன்.

ஆய நூல்வயி ராக்கிய சதகத்தி னைம்பஃ
தேய தோத்திர முரைபெறு மையிலியல் மாணார்
மேய காலுரை கோடலின் மிடுக்குற லிரியத்
தூய மேலுரை தீந்தமி ழமுதினிற் சொற்றான். (4)

வித்த கன்கொற்ற வாளிறை யடிமுடி விமலன்
சித்தி யாம்நெல்லை யம்பிகை யருட்பெறு செல்வன்
முத்தி ராமலிங் கேந்திரன் வழிவரு முனிவன்
மெத்து கோவிலூர்ச் சங்கரா னந்தமே லவனே. (5)

இன்ன சீரிய நூலுரை முறைப்பட விருந்தே
நன்ன ரன்னர்பாற் பாடமுற் றிடுநெல நயப்பால்
பின்னை யின்னநூல் வெளிவரல் விரும்பிய பெட்பால்
துன்னு பொன்னளித் துதவியர் பெற்றியுஞ் சொல்வாம்.

கானி டம்படு குமாரசா மிப்பதி கவினும்
மானி டம்படு தக்ஷிணா மூர்த்திமா மடத்தார்
தேனு டம்படு மிசைதெரித் தனரெவ ரிவர்போல்
மானு டம்பெறு மாண்பறிந் தொழுகுநர் மாதோ! (7)

(வேறு)

உலகினுறு மக்கள்பிறப் பறுத்திடவோர்
மருந்துண்டே னுண்டா மென்னத்
தலவகில மெச்சுறுவை ராக்யசத
கப்பினுரை தந்தான் செந்தேன்
குலவுமலர் புனைபரமன் கண்மணியுந்
திருநீறுங் கொண்ட கோவிற்
றலமகலாத் துறவுறுசங் கரானந்த
சுவாமியெங்கள் தலைவன் றானே! (8)

முற்றிற்று.

---



உ

# 25. வைராக்கிய சதகம்

## தோத்திரமும்—உரையும்.

---

ஸ்ரீ கோவிலூர் பஞ்சமூர்த்தித்துதி

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

* பொன்னுலகும் புவியனைத்தும் புகழ்ந்தேத்தும்
பொற்புடைய சுடர்க்களிற்றை
மின்னுகதிர் வேலணிபன் னிருகரனை
யெண்குணமோர் படிவமான

---

* இந்த இரண்டு துதிகளும் உரையாசிரியரா லுரைக்கப்பட்டன.

மன்னுகொற்றவா ளிறையை மருளிரிக்கும்
திருநிலையம் பிகைமின் ஞேடும்
துன்னறிவே திரண்டெழுந்த முத்திராமத்
தூயவனும் நாயகனைத் தொழுது வாழ்வாம். (1)

குருவணக்கம்

பொல்லாப் பிறப்பை யறுக்குநெறி தந்தமாயோன்
எல்லாவுலகு மளிக்குமெ னப்பனே யான்
நல்லா ருரைத்தபடியே யுளத்துன்னி யிந்த
வல்ல லறுக்குந் துதிக்கோருரை கூறவேனல். (2)

நூல்

மனம் தானுமன்று தன்வயமுமன்று என்று அறிந்து அதனை விடுத்துத் தன்னையும் அதனையும் கூட்டவும் பிரிக்கவும்வல்ல சிவத்தைநோக்கி மேல் விவேகம் கூறுகின்றது :—

பொல்லா தவெனெஞ்ச மோரைந்து புலன்கடம்பா
லல்லாதரை மாத்திரையுந் நின்னடிக் கணன்பாய்
நில்லாதிதற் கென்னைசெய் கேனிதை நின்றிடென்றே
சொல்லாய் திருத்தில்லை யுண்மேவிய சோதிநீயே.

(இதன்பொருள்) திருத்தில்லையுள் மேவிய சோதி—மேன்மைமிக்க சிதம்பரத்தின்கண்ணே பொருந்திய (ஆனந்த நடனம் புரிகின்ற) சுயஞ்சோதி சொரூபரான நடராஜப்பெருமானே! என் பொல்லாத நெஞ்சம் - அடியேனுடைய கொடிய மனம், ஓர் ஐந்து புலன்கள் தம்பால் அல்லாது - ஒப்பற்ற ஐந்திந்திரிய வழித்தாக விடயங்களில் செல்வதல்லாமல், அரைமாத்திரையும் - அரைக்கணப்போதும், நின் அடிக்கண் அன்பாய் நில்லாது - தேவரீருடைய திருவடியின்கண்ணே அன்பாக நிற்கவில்லை, இதற்கு என்னை செய்கேன் -



இப்படியிருக்கின்ற மனதை நாயேன் என்னசெய்ய முடியும்? இதை நின்றிடு என்று நீயே சொல்லாய் - இம்மனம் திருவடியின்கண்ணே ஒற்றுமையாக நிற்கும்படிதேவரீரே அருள்செய்வீராக, (என்றவாறு.) என்றே, என்பதில் ஏகாரம் அசைநிலை.

நீயேயருள் செய்யி னல்லாதுபொய் நெஞ்சவஞ்சத்
தீயேனுனை வந்தடைதற் கொரு செய்கைகாணேன்
பேயேனுமுனைத்தொடரும்படி பேசுதில்லைத்
தூயோயொ ருபாயம் விடாதினிச் சூழ்ந்துநின்றே.

(இ - ள்.) தில்லைத்தூயோய் - தில்லைப்பதியில் விளங்குகின்ற பரிசுத்தமானவனே! நீயே அருள்செய்யின் அல்லாது - தேவரீரே கிருபை செய்தாலன்றி, பொய் நெஞ்ச வஞ்சத்தீயேன் - பொய்யான மனதின்கண்ணே வஞ்சகமுடைய கொடியனாகிய அடியேன், உனை வந்து அடைதற்கு - தேவரீரைநாடி பொருந்துதற்கு, ஒரு செய்கை காணேன்—ஒரு செயலுங் (சிறந்த வொழுக்கமெதையுங்) கண்டிலேன், இனிவிடாது சூழ்ந்து நின்று - இனி அடியேனைவிடாமல் உன் அருளோடு நெருங்கி நின்று, பேயேனும் உனைத்தொடரும்படி ஒரு உபாயம் பேசு - பேய்போன்ற நாயேனும் தேவரீரையடையும்படி ஒருமார்க்கம் (வழி) அருள்செய்வீராக! (எ - று.) நின்றே என்பதில் ஏகாரம் அசைநிலை. (2)

நின்றாய் திருத்தில்லையு ளாயென்ற னெஞ்சினுள்ளே
யென்றாலு மெனக்கதி தூரமதா யிருந்தா
யொன்றாலு முனைத்தொ டர்கிற்கு முபாயங்காணேன்
மின்றாழ் சடையாய் தமியேற்கு விளங்கிடாயே.

(இ - ள்.) திருத்தில்லையுளாய் - மேன்மைபொருந்திய தில்லையில் நடம்புரிவோனே! என்தன் நெஞ்சின் உள்ளே நின்றாய் என்றாலும் - என்னுடைய (அடியேனுடைய) இருதய குகையில் தேவரீர் அணுவுக்கணுவாய் இருந்தபோதிலும், எனக்கு அதிதூரமதாய்

இருந்தாய் - அடியேனுக்குத் தேவரீர் மிகவும் சேய்மையுற்றிருக்கின்றீர், ஒன்றுலும் உனைத் தொடர்கிற்கும் உபாயம் காணேன் - எவ்வாற்ருனும் தேவரீரைப் பின்பற்ரு நிற்கும் மார்க்கமறியேன், மின்தாழ்சடையாய் - மின்னல்போன்ற பிரகாசமான நீண்ட சடையையுடையவனே! தமியேற்கு விளங்கிடாய்—அடியேனுக்குத் தேவரீர் அவ்வுபாயம் விளங்கும்படி செய்வீராக! (எ - று.) ஏகாரம் - அசைநிலை. விளங்கிடாய் என்னும் தன்வினைச்சொல், விளக்கிடாய் என்னும் பிறவினைப்பொருளை யுணர்த்திற்று. (3)

விளங்கும் மெழிற்பேதையர் காதல்விடா தயானக்
களங்கம் மறுவோர்தொழு நின்கழல் காணுமாறென்
றுளங்குமொ ளித்தூமதி சூடியதோன் றலேயென்
னுளங்கொண் டிடுநீயி னிக்கோயி லதாவுவந்தே.

(இ - ள்.) - ஒளி துளங்கும் தூமதிசூடிய தோன்றலே-ஒளிசெய்யும் பரிசுத்தமாகிய சந்திரனை (மூன்ரும்பிறைச்சந்திரனைச்) சிரசில் தரித்து விளங்கும் பெருமை யுடையவரே! எழில் விளங்கும் பேதையர் காதல் விடாத யான் - அழகுமிக்க பெண்களின்மீது ஆசைநீங்காத அடியேன், அக்களங்கம் அறுவோர் தொழும் - அந்த ஆசை நீங்கினவர்கள் (குற்றமற்ற பெரியோர்கள்) தொழுகின்ற (அடையக்கூடிய), நின் கழல் காணுமாறு என் - தேவரீருடைய திருவடியைக் காண்பது (அடைவது) எப்படி? இனி நீ உவந்து என் உளமதி கோயிலாக் கொண்டிடு - இனித் தேவரீர் சந்தோஷித்து அடியேனுடையமனத்தையே உமது திருக்கோயிலாகக்கொண்டு அமர்வீராக, (எ - று.) உவந்தே - என்பதில் ஏகாரம் அசை. (4)

வந்தித் திடுவார்பவ நோய்க்கு மருந்தனேயைச்
சந்தித்திடுவான் மறித்தான் மனந்தப் பியப்பா
லிந்தப் புவியுங்கட லுங்கடந் தேகுமென்ரு
லெந்தப் படியுய்வதி யான்றில்லை யெம்பிரானே.



(இ - ள்.) - தில்லை எம்பிரானே - தில்லையின்கண்ணே நடம்புரியும் எமது தலைவனே! வந்தித்திடுவார் பவநோய்க்கு மருந்து அனேயை - முக்கரணங்களாலும் வழிபடுகின்றவர்களுடைய ஜனனமரணமென்கின்ற வியாதிக்கு மருந்துபோன்றிருக்கின்ற தேவரீரை, சந்தித்திடுவான் மறித்தால் - பொருந்துவதற்காக (தரிசிக்க மனதை விடயங்களிலிருந்து) திருப்பினுல், மனம் தப்பி - மனமானது தேவரீரை நாடாமல் தவறி, இந்தப் புவியும் கடலும் கடந்து அப்பால் ஏகும் என்ருல் - இம்மண்ணுலகும் சமுத்திரமுந் தாண்டி அதற்கப்பால் செல்லுமென்ருல், யான் எந்தப்படி உய்வது - அடியேன் எங்ஙனம் பிழைப்பது? (எ-று) (5)

பிரானே திருத்தில்லையு ளாயன்றிப் பேதையேன்மு
ஞெரானே றிவர்ந்தம் பிகையோ டெளிதோடிவந்தாய்
வரானே வினமெம்மிறை யென்றுனை நாடிவாடி
யிராநாயடி யேற்கெதிர் தோன்றிலை யின்றிதென்னே.

(இ - ள்.) · பிரானே திருத்தில்லையுளாய் - தலைவனே! அழகிய தில்லையின்கண்ணே .வீற்றிருப்பவனே! அன்று இப்பேதையேன் முன் - அக்காலத்து இந்த அறிவீனனுன அடியேன் முன்னே, அம்பிகையோடு ஒரு ஆன் ஏறு இவர்ந்து - உமாமகேசுவரியோடு ஒப்பற்ற இருஷபத்திலேறி வீற்றிருந்து, எளிது ஓடிவந்தாய் - (அடியேன் நினையாதிருக்கவும்) விரைவாக வந்து தேவரீர் தரிசனங்கொடுத்தீர், இனம் எம் இறை வாரானே என்று உனைநாடி - இன்னும் ஒருதரம் எமதிறைவன் வாரானே என்று தேவரீரைத் தியானித்து, வாடி இரா நாயடியேற்கு - மிக வருந்தியிருக்கின்ற நாய்போன்ற அடியேனுக்கு, இன்று எதிர் தோன்றிலை இது என்னே - இப்போது தரிசனங் கொடுக்கவில்லை இது என்னகாரணம்? (எ-று.)

என்னுயகனே யிமையோர் தொழுமீ சனேசெம்
பொன்னுர் திருவம்ப லத்தாடிய பூதநாதா

வுன்ன ரருளாலினி வீட்டிடை யுய்த்தியின்றேற்
பின்ன ருயக்கொள்ள வலாரென் பிழைகடீர்த்தே.

(இ - ள்.) - என் நாயகனே - எமது பிரானே ! இமையோர் தொழும் ஈசனே - தேவர்கள் வணங்குகின்ற இறைவனே ! செம் ஆர் திரு பொன் அம்பலத்து ஆடிய பூதநாதா - செவ்விய அழகிய கனகசபையில் நடனம்செய்த, உயிர்களுக்கெல்லாம் நாத (தலைவ) னவனே ! உன் ஆர் அருளால் இனி வீட்டிடை உய்த்தி இன்றேல் - தேவரீர் உமது நிறைந்த அருளால் இனி அடியேனை மோக்ஷமடையும்படி செய்யாவிடில், பின் என்பிழைகள் தீர்த்து - பின்னர் அடியேனுடைய குற்றங்களை நீக்கி, உயக்கொள்ளவலார் ஆர் - உய்விக்க (மோக்ஷமடைவிக்க) சாமர்த்தியமுடையவர் தேவரீரைத் தவிர வேறு யாரிருக்கின்றனர் ? (எ - று.) தீர்த்தே, என்பதில் ஏகாரம் அசைநிலை. பூதநாதா என்பதற்கு, பூதகணங்களுக்குத் தலைவனே ! என்றுங் கொள்ளலாம். (7)

தீராதவோ ரைம்புலச் சேட்டையுந் தீர்ந்துபோய்வெங்
கூரார்மழுவா ளிநின்பாதங் குழைந்து போற்றி
நீராயுருகித் தொழுதுன் னெதிர்நிற்கும் வண்ண
மோர்நா ளுளதோதமி யேற்குமு ரைத்திடாயே.

(இ - ள்.) - தீராத ஓர் ஐம்புலச் சேட்டையும் தீர்ந்துபோய் - நீங்காத ஒப்பற்ற பஞ்சேந்திரியங்களின் பயனின்றிய தொழில் நீங்கி, வெம்கூர் ஆர்மழுவாளி - கொடிய கூர்மைபொருந்திய மழுவைத் தரித்திருக்கின்றவனே ! நின்பாதம் குழைந்துபோற்றி—தேவரீருடைய திருவடியை மனம் வாடித் துதித்து, நீராய் உருகித்தொழுது உன் எதிர் நிற்கும் வண்ணம் - கண்ணீர்சொரிய மனமுருகி வணங்கித் தேவரீர் சன்னிதானத்தில் நிற்கும்படி, ஓர்நாள்உளதோ - ஒருதினம் உண்டோ? (இல்லையென்றபடி), தமியேற்கும் உரைத்திடாய் - அடியேனுக்கு அருள்வாயாக, (எ - று,) தமியேற்கும்



என்ற உம்மை இழிவைக்காட்டுகின்றது. உரைத்திடாயே, என்பதில் ஏகாரம் அசைநிலை. (8)

உரையே னனிவாய் திறந்துன்புகழ் தன்னைநாளும்
விரையார்மல ரிட்டருச் சிக்கவிருப்பு மில்லேன்
கரையே னுளநின்னினைந் தெத்திறத் தாற்கடப்பேன்
றிரையார் வினையார் பிறவிக்கட றில்லையானே.

(இ - ள்.) - தில்லையானே - தில்லையின்கண்ணே வீற்றிருக்கும் எம்பெருமானே ! நாளும் உன் புகழ்தன்னை வாய்திறந்து நனி உரையேன் - தினமுந் தேவரீருடைய புகழை வாயினால் மிகவும் (மிகுந்த ஓசையோடுகூடி) தோத்திரஞ் செய்யவில்லை, விரை ஆர் மலர் இட்டு அருச்சிக்க விருப்பும் இல்லேன் - வாசனை பொருந்திய புஷ்பங்களால் தேவரீரைப் பூஜிக்கப் பிரிய மற்றவனுயிருக்கின்றேன், நின் நினைந்து உளம் கரையேன் - தேவரீரை நினைத்து மனமுருகப் பெற்றிலேன், வினைஆர் திரைஆர் பிறவிக்கடல் எத்திறத்தால் கடப்பேன் - இருவினைகளான அலைகள் பொருந்தியிருக்கின்ற பிறவிச் சமுத்திரத்தை நாயேன் எவ்விதத்தால் கடக்கும் ஆற்றலுடையேனுவேன் ? (எ - று.) வினை ஆர் பிறவி திரை ஆர்கடல் - வினை மிகுதியாலேற்படும் பிறப்பாகிய அலைகள் நிறைந்த கடலை, எனினுமமையும். (9)

ஆனேறிவர்ந் தென்னெதிரே விரைந்தன்று வந்தோய்க்
கேனோ வெறுப்பிப் பொழுதோர்சற் றிரங்குகில்லாய்
நானோ வறிவேனுன் பெருமையை நம்பனேநீ
தானே பொறுத்தாளு கண்டாயென் றவறெலாமே.

(இ - ள்.) அன்று ஆன் ஏறு இவர்ந்து விரைந்து என் எதிரே வந்தோய்க்கு - அக்காலத்து இடபத்தின்மீதமர்ந்து சீக்கிரமாக அடியேன் முன்னே வந்து தரிசனங்கொடுத்த தேவரீருக்கு, இப்பொழுது வெறுப்பு ஏனோ - இப்போது அடியேன்மீது வெறுப்பு

தோன்றுவதற்கு என்ன காரணமோ? ஓர் சற்று இரங்குகில்லாய் - கொஞ்சமாவது அடியேனிடத்து இரக்கங்கொண்டாயில்லை, உன் பெருமையை நானோ அறிவேன் - தேவரீருடைய பெருமையை அடியேனோ அறியவல்லேன்? நம்பனே நீ என் தவறெலாம் பொறுத்து ஆளு - நம்பிரானே! (சிவனே!) தேவரீர் அடியேன் செய்த குற்றங்களையெல்லாம் மன்னித்துக் காப்பாற்றுவீராக,(எ-று:) கண்டாய் - என்பது முன்னிலையசை. தான், ஏ, ஏ, இவைகள் அசை நிலைகள்.

(10)

எல்லா மறிவோயறிந்தே வகுத்திட்ட வாறே
யல்லாற் றமியேனும் புரிவதொன் றில்லையானுற்
பொல்லாமை செய்வித்தவ னீபொறுப் பானுநீகல்
வில்லா யிளைத்தேனைப் பவத்தினி விட்டிடேலே

(இ - ள்.) எல்லாம் அறிவோய் - (ஜீவர்கள்செய்த) எல்லாக் கருமங்களையும் ஒருங்குணர்கின்றவனே! (சர்வஞ்ஞனவனே!), அறிந்து வகுத்திட்டவாறே அல்லால் - (அடியேன்செய்த இருவினைகளையும்) தெரிந்து தேவரீர் வகைப்படுத்தியவண்ணம் (இன்ன இன்ன காலங்களில் இன்ன இன்ன வினைகளைச் செய்யவேண்டுமென்று நியமித்தபடி) அல்லாமல், தமியேனும் புரிவது ஒன்று இல்லை ஆனல்- அடியேனும் செய்வது வேறொன்றுமில்லை யாகையால் (கருமத்தைத் தாண்டி ஒன்றுஞ் செய்வதில்லையாகையால்), பொல்லாமை செய்வித்தவன் நீ - பலவிததீங்குகளைச்செய்யுமாறு அடியேனைத்தூண்டினவனும் நீயேயாகிறாய், பொறுப்பானும் நீ - (அவற்றை) மன்னிப்பவனும் நீயே. கல்வில்லாய் - மேருவை வில்லாகத் தரித்தவனே! இளைத்தேனை இனி பவத்து விட்டிடேலே - (பிறப்பிறப்புகளில் மிகவும்) மெலிந்த அடியேனை இன்னும் ஜனன(மரண) மடையும்படி விடக்கூடாதே! (எ - று.) விட்டிடேலே, என்பதில் ஏகாரம் இரக்கக்குறிப்பு. கல், சினையாகுபெயராய் மேருவையுணர்த்திற்று. (11)



ஏலக்குழ லாரநு ராகமதென் னுமாயா
சாலக்குளைந் தேற்குன தின்னருடந்து காப்பாய்
நீலக்கள மாலயனோடு முன்னேடி வாடு
மூலக்கன லேகனலேந் துகைம்முக் கணனே.

(இ - ள்.) நீலக்கள - (திரு) நீலகண்டா! (விடம்பொருந்திய கழுத்தையுடையவனே!), முன் மால் அயன் நேடி வாடும் மூலக் கனலே - முற்காலத்தில் விண்டு பிரமா இருவரும் தேடித்துன்பமுற்ற மூலாக்கினி சொரூபரே! கனல்ஏந்து கை-அக்கினியைத்தரித்திருக்கின்ற கையையுடைய, முக்கணனே - (சோம, சூரிய, அக்கினியென்னும்) மூன்று கண்களையுடையவனே! ஏலக்குழலார் அநுராகம் என்னும் - வாசமூட்டியமயிர்களையுடைய பெண்களிடத்தில் ஆசையென்கின்ற, மாயா சாலக்குள்-மாயவலையிற்சிக்கி, நைந்தேற்கு- வருந்துகின்ற அடியேனுக்கு, உனது இன் அருள் தந்து காப்பாய் - தேவரீருடைய இனியகிருபையைத்தந்து காப்பாற்றுவீராக, (எ-று.) அநுராகமது, என்பதில் அது, பகுதிப்பொருள் விகுதி. ஓடு, அசை நிலை.

(12)

கண்ணார் நுதலோய் கடையேனையு மொன்றதாயே
யெண்ணு வருளன்று சுரந்துளைக் கின்றிலாதென்
விண்ணோ ரிறையோய்க்கு முண்டோசொல் வெறுப்பினோடு
தண்ணார் விருப்புங் கரிப்போர் வையசாற்றிடாயே.

(இ - ள்.) கண் ஆர் நுதலோய் - கண்பொருந்திய நெற்றியையுடையவனே! (நெற்றிக்கண்ணா!), கடையேனையும் ஒன்றதாய் எண்ணு - நீசனான அடியேனையும் ஒரு பொருளாய் எண்ணி, அன்று அருள் சுரந்துளைக்கு - அக்காலத்து கிருபை பொழிந்த தேவரீருக்கு, இன்று இலாது என் சொல் - இப்போது அக்கிருபை இல்லாததற்கு என்னகாரணம்? சொல்வாயாக, கரிப்போர்வைய - யானையின் தோலைப் போர்வையாகக் கொண்டவனே! விண்ணோர் இறை

யோய்க்கும் வெறுப்பினேடு தண் ஆர் விருப்பும் உண்டோ சாற்றிடாய் - சுரர்களுக்கு இறைவரான தேவரீருக்கும், வெறுப்பும் குளிர்ச்சிபொருந்திய விருப்பும் உண்டோ? கூறியருள்வீராக, (எ - று.) தண் ஆர்கரிப்போர்வைய எனினுமாம். ஒன்றது, என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. ஏகாரம் இரண்டும் அசைநிலைகள். (13)

சாற்ருய் திருத்தில்லை யுள்ளாய்சிவ சங்கராவெண்
ணீற்ருய் கடையேனுயுமா றென்ற னெஞ்சுளஞ்சிப்
போற்ருதிருந்தேன் வருந்தாம லென்புத்திதன்னைத்
தேற்ருயொரு நீயினியன்பினைச் செய்யுமாறே.

(இ - ள்.) திருத்தில்லையுள்ளாய் - அழகியதில்லையின்கண் வீற்றிருப்பவனே! சிவ-மங்கலவடிவானவனே! சங்கரா-சுகத்தைச்செய்கின்றவனே! வெண் நீற்ருய்-வெண்மையான விபூதியைத் தரித்தவனே! கடையேன் உயுமாறு சாற்ருய்-இழிவான அடியேன் மேன்மையடையும்படிசொல்வாய் (திருவருள் செய்வாய்),என்தன் நெஞ்சுள்அஞ்சிப் போற்ருதிருந்தேன் - என்னுடைய (அடியேனுடைய) மனம் பயந்து (அடியேன் பிறப்பிறப்பிற்கு அஞ்சித்) தேவரீரைத் துதிக்காமலிருந்தேன், ஒரு நீ இனி அன்பினைச் செய்யுமாறு என் புத்திதன்னை வருந்தாமல் தேற்ருய் - ஒப்பற்ற நீ இனி (தேவரீரிடத்தில்) அடியேன் அன்புசெய்யும்படி என் புத்தியை வருத்தமடையாமல் (பயமுதலியன ஏற்படாமல்) தெளிவிப்பாய், (எ - று.) அஞ்சுவதற்குக் காரணம், வழிபடும் முறைமை தோன்ருமை யென்றுங் கொள்ளலாம். செய்யுமாறே, என்பதில் ஏகாரம் அசைநிலை. (14)

மாருயவோ ரைந்துபுலன் வலிமாய்த்து நெஞ்சை
நீருர்திருமேனியவுன் கணிறுத்தமாட்டே
னேருத பவக்கடலேறவு மெண்ணினைந்தேன்
கூருயெனதெண்ண மெவ்வண்ணங் கைகூடுமன்றே.

(இ - ள்.) நீறு ஆர் திருமேனிய - வெண்ணீறணிந்திருக்கின்ற அழகிய சரீரத்தையுடையவனே! மாருய - தம்மின் மாறுபட்டு விளங்குகின்ற (விவேகம், மனம் இவற்றிற்கு வேருகிய), ஓர் ஐந்து புலன் வலி - ஒப்பற்ற ஐந்திந்திரியங்களின் (விடயங்களில் செல்கின்ற) சாமர்த்தியத்தை, மாய்த்து - விவேகத்தால் கெடுத்து, நெஞ்சை - மனதை, உன்கண் நிறுத்தமாட்டேன் - தேவரீரிடத்தில் நிலைபெற்றிருக்கச் செய்யவல்லேனல்லேன் (தேவரீரை நாடும்படி செய்வதில்லை), ஏருத பவக்கடல் ஏறவும் எண்ணி நைந்தேன் - (அனதிகாரிகளால்) ஏற முடியாத பிறவிக்கடலைத் தாண்டவும் (தாண்டுவதற்கும்) நினைத்து வருந்தினேன், எனது எண்ணம் எவ்வண்ணம் கைகூடும் (எனக்) கூருய் - அடியேனுடைய சங்கற்பம் எந்த விதத்தில் சித்தியாகும்? என்று அருள்வாயாக, (எ - று.) என, என்பது வருவிக்கப்பட்டதால் சொல்லெச்சம். அன்று ஏ அசை நிலைகள். (15)



அன்றே தமியேற் கெளிமானுடனுகி நீவந்
துன்ருள்க ளளித்தனை பெற்றுமொன்றும் பெருரி
னின்றே னலதைம்புலனென்வச நின்றதில்லை
யின்ருேதவற்றைக் கொலுபாய மொன்றீசவெற்கே.

(இ - ள்.) அன்று நீ மானுடனுகி எளிவந்து தமியேற்கு உன் தாள்கள் அளித்தனை - அக்காலத்து தேவரீர் ஓர் மானுடதேகத்துடன் சுலபமாக (யான் கோராமலிருக்க) வந்து அடியேனுக்குத் தேவரீர் திருப்பாதங்களைக் கொடுத்தீர் (திருவடி தீக்ஷைசெய்தீர்), பெற்றும் ஒன்றும் பெருரின் நின்றேன் அலது - (அங்ஙனம் திருவடியை) அடைந்தும் ஒன்றும் அடையாதவனைப்போலிருக்கின்றேனல்லாமல், ஐம்புலன் என்வசம் நின்றதில்லை - ஐந்திந்திரியங்களும் (விவேகமான) எனக்கு சுவாதீனப்படவில்லை, ஈசற்கு இன்று அவற்றைக் கொல் உபாயம் ஒன்று ஓது - ஈசனே! அடியேனுக்கு இப்போது அவ்விந்திரியங்கள் விடயங்களில் செல்லாமல் வலிமை குன்றும்படியான ஒருபாயம் அருள்வாயாக. (எ-று.) ஏகாரம் இரண்டும் அசைநிலைகள். (16)

எற்கோவுனதன்பு மனத்திலையென்ற னெஞ்சங்
கற்கே நிகராயதிக்கல்லை நீ கல்லைவில்லா
முற்கால் வளைத்தாங்குவளைத் தன்பின் மூழ்குவிப்பாய்
சிற்கோல சிதம்பரநாயக தேவதேவே.

(இ - ள்) சித்கோல - ஞான சொரூபரே! சிதம்பரநாயக - சிதம்பரத்திலுள்ள கனகசபைக்குத் தலைவனே! (சிதம்பரமென்கின்ற திருப்பதிக்குத் தலைவனே!), தேவ தேவ - தேவர்களுக்கெல்லாந் தேவனே! (சிவனே!), எற்கு மனத்து உனது அன்பு இலை - அடியேனுக்கு மனதில் தேவரீரிடத்து அன்பில்லை, என்றன் நெஞ்சம் கற்கு நிகராயது - அடியேனுடையமனம் கல்லுக்குச் சமானமானது, நீ கல்லை வில்லா முற்கால் வளைத்தாங்கு இக்கல்லை வளைத்து அன்பின் மூழ்குவிப்பாய் - தேவரீர் மேருகிரியை வில்லாக முன்காலத்தில் வளைத்ததுபோல, கல்லுபோன்ற இம்மனதை வளைத்து அன்பில் முழுகும்படி செய்விப்பாய் (தேவரீரிடத்தில் அன்புடையவனுக்குவீர்), (எ - று.) முற்கால் நீ கல்லை வில்லா வளைத்தாங்கு, என்றுமாம். ஓ, ஏ இரண்டும் அசைநிலைகள். (17)

தேவேயுனையன்பினிற் பூசைசெய்தேனுமல்லே
னாவான்மிகப்பாடி நின்றாடி நயக்குகில்லே
னோவாதுழறீ மனத்தோடிவ ணுற்றளேன்மற்
றாவா வினியென் வருமென்ப தறிந்திலேனே.

(இ - ள்) தேவே உனை அன்பினில் பூசை செய்தேனும் அல்லேன் - தெய்வமே! உன்னை அன்போடு பூசித்தேனில்லை, நாவால் மிகப்பாடி நின்று ஆடி நயக்குகில்லேன் - நாவினால் அதிகமான தோத்திரங்களைப்பாடி சன்னிதானத்தில் நின்று நிருத்தஞ்செய்து தேவரீரை ஆனந்தமுறச் செய்தேனில்லை; ஓவாது உழல் தீமனத்தோடு இவண் உற்றுளேன் - ஓய்வின்றி (விடயங்களில்) சுழல்கின்ற கொடிய மனதோடு தேவரீர் சன்னிதானத்தையடைந்துளேன் (இவ்



வுலகில் வாழ்கின்றேன்), [திரிகரணங்களாலும் கடவுளை வழிபடவில்லையென்பது கருத்து], ஆ ஆ - ஐயோ! இனி என் வரும் என்பது அறிந்திலேனே - இவ்வுடம்பு நீங்கினால் எத்துன்பம் வருமென்பதைத் தெரிந்துகொண்டேனில்லை, (எ - று.) மற்று அசைநிலை.

அறியாமையிற் கீழவர்பல்பிழை யாற்றினுங்
குறியாதருள் செய்வது மேலவர் கொள்கையன்றோ
மறியார் கரத்தோய் சிறியேன் வினைமாற்றியாளப்
பொறியேலுனக் கென்முகமன் சொலப் பொய்யனேனே.

(இ - ள்) மறி ஆர் கரத்தோய் - (பெண்) மானைத்தரித்திருக்கின்ற கையையுடையவனே! கீழவர் அறியாமையில் பல் பிழை ஆற்றினும் - அறிவிலிகள் அவிவேகத்தினால் பல பிழைகள் செய்தபோதிலும், குறியாது அருள்செய்வது மேலவர்கொள்கை அன்றோ - அவற்றை யொருபொருளாய்க் கருதாது அன்னோர்க்குக் கிருபை செய்வது சான்றோருடைய முறைமையல்லவா? சிறியேன் வினை மாற்றியாளப்பொறியேல் - அடியேன் செய்த இருவினைகளையும் நீக்கிக் காப்பாற்றுவது உன்கடமையாயின், பொய்யனேன் உனக்கு என்முகமன் சொல - பொய் பேசுபவனான அடியேன் தேவரீருக்கு என்ன உபசாரஞ் சொல்லக்கூடும்? (ஒன்றுமில்லை யென்றபடி), (19)
(எ - று.) ஏகாரம் அசைநிலை.

பொய்யற்றவர் வந்தடையும் பரிபூரணவிம்
மெய்யற்ற வெற்கு நினலாலில்லைவேறு முண்டோ
தையற்கிடமே யிடமா வருடாணுவேபொன்
மையற்ற விர்ப்பானுன் கடாக்ஷம் வழங்கிடாயே.

(இ - ள்) பொய்யற்றவர் வந்தடையும் பரிபூரண - களங்கம் நீங்கினவர்கள் (பொய்ம்மையாகிய தங்கள் தேகத்தின்மீதும் உலகத்தின்மீதும் பற்றற்ற பெரியோர்கள்) அடையக்கூடிய (சாக்ஷாத்கரிக்கத்தக்க) எங்கும் நிறைந்த சொரூபத்தை யுடையவனே! இம் மெய்

யற்ற எற்கு - இப்பொய்யனான அடியேனுக்கு, நின் அலால் வேறு நிலை உண்டோ - உன்னையல்லாமல் (தேவரீரையன்றி) வேறு பற்றுக்கோடுண்டா? (இல்லையென்றபடி), தையற்கு இடம் இடமா அருள் தாணுவே - பெண்ணிற்கு (உமாதேவிக்கு) இடப்பாகத்தைத் தங்குதற்கு இடமாயருளிய கிருபாமூர்த்தியான சிவனே! என் மையல் தவிர்ப்பான் - அடியேனுடைய (யான் எனதென்கின்ற) மயக்கம் நீங்கும்பொருட்டு (மை அற்று அவிர்ப்பான் - அஞ்ஞானம் நீங்கி ஞானம் உதயமாகும்பொருட்டு), உன்கடாக்ஷம் வழங்கிடாய் தேவரீர் (கிருபையுடைய கடைக்கண்பார்வை பார்த்தருள்வீராக, (எ - று.) எகாரம் இரண்டும் அசைநிலைகள். (20)

வழங்கெற் கிவணேது செய்தாலெதுவாகு மென்றென்
றெழுங் கற்பனையாவு மிறந்துணர் வேகமேயா
யொழுங்கிற் புலனாதியுபாதி யொழித்தொருன்னைச்
செழுங்கைக் கனியொத்துணரும்படி தில்லையானே.

(இ - ள்.) தில்லையானே - தில்லையில் நடம்புரியும் எம்பெருமானே! இவண் எது செய்தால் எதுவாகும் என்று என்று எழும் கற்பனை யாவும் இறந்து - இவ்விடத்தில் (இவ்வுலகத்தில்) எக்காரியஞ் செய்தால் எப்பயனுண்டாகும்? என்று என்று (அடிக்கடி) உண்டாகின்ற சங்கற்பங்களெல்லாம் ஒழிந்து, ஒழுங்கு இல் புலன் ஆதி உபாதியொழித்து - (விடயங்களை நுகருவதில்) கிரமமற்ற இந்திரிய முதலியவைகளின் அபிமானரூப தடைகளை நீக்கி, உணர்வு எகமேயாய் - ஞானம் ஒன்றேயாய் (பஞ்சகோசம் முதலியவற்றையறிந்துகொண்டிருக்கின்ற திருக்கு வடிவமாய்), ஒரு உன்னை - ஒப்பற்ற தேவரீரை, செழுங்கைக்கனி ஒத்து - கையிலிருக்கின்ற வளப்பமிக்க நெல்லிக்கனியைப்போல (மிகத்தெளிவாய்), உணரும்படி எற்கு வழங்கு - அறியும்படி அடியேனுக் கருள்செய்வீராக, (எ - று.)

தில்லைப் பதிமேய சிவப்பிரகாசனேயோ
தொல்லைப் பிறவாநெறி மேவிய தோன்றலேயோ



வல்லற் பிறவிக் கிளைத்தேன்றனையஞ்சலென்றோர்
சொல்லைப்பகராய் விடைமீதினந் தோன்றி நின்றே.

(இ - ள்) தில்லைப்பதி மேய சிவப்பிரகாசனே - தில்லைப்பதியின்கண்ணே யெழுந்தருளிய மங்கள சொரூபனே! அல்லது, சிவப்பிரகாசன் என்கின்ற திருநாமத்தையுடைய எனது ஆசாரிய மூர்த்தமே! தொல்லைப் பிறவாநெறி மேவிய தோன்றலே - பழமையாகிய திருப்பேரூரின்கண்ணே பொருந்திய பெருமையிற் சிறந்தோனே, (எனது உபாசனாமூர்த்தமே!), இனம் விடைமீது தோன்றி நின்று - இன்னுமொருதரம் இடபத்தின்மீதெழுந்தருளி, அல்லல் பிறவிக்கு இளைத்தேன்தனை அஞ்சல் என்று ஓர் சொல்லைப்பகராய் - துன்பமே வடிவாகிய ஜனன மரணத்திற்சிக்கி மெலிந்தோனாகிய அடியேனைநோக்கி பயப்படாதே(உனக்கு பிறப்பிறப்புநீங்கிவிட்டது) என்று ஒரு சொல்லை அருள்வாய்! (ஒப்பற்றசொல் எனினுமாம்), (எ - று.) ஓகாரம் இரண்டும், எகாரமும் அசைநிலைகள். (22)

தோன்றாத்துணையே புணையே பவத் தொல்கடற்கென்
போன்றார்க்கு மிரங்கு மருட்பெரும் போதமேயிங்
கீன்றார் மனையாதிய மோகமெலாம் விடுத்துட்
சான்றாமுனையே வினையே னினிச்சார வெண்ணே.

(இ - ள்) தோன்றாத் துணையே - மறைந்திருந்து இரட்சிப்பவனே! (எனை விடாது என்னிடத்துத் தோன்றி நிற்குந் துணைவனே!) பவத் தொல்கடற்குப் புணையே - பிறப்பென்கின்ற அனாதியான சமுத்திரத்திற்கு (அனாதியான பிறவிச் சமுத்திரத்திற்கு)த் தெப்பம் போன்றவனே! என் போன்றார்க்கும் இரங்கும் அருள் பெரும் போதமே - என்னை யொத்தவர்களைக் குறித்தும் பரிதபிக்கின்ற கிருபைமிக்க ஞான சொரூபமே! இங்கு ஈன்றார் மனை ஆதிய மோகமெலாம் விடுத்து - இவ்வுலகில் தாய் மனைவி முதலியோரை எனதென்று கருதுகின்ற மயக்கமெல்லாம் நீக்கி, உள் சான்றாம்

உனையே வினையேன் இனிச்சார எண்ணே - இருதயத்தில் சாக்ஷி மாத்திரமாயிலங்குகின்ற தேவரீரைத் தீவினைகளையே செய்கின்ற அடியேன் இனிப் பொருந்த (சாக்ஷாத் கரிக்க) திருவுளத்து எண்ணு வீர், (எ - று.) போன்ருர்க்கும் என்றவும்மை இழிவைக்காட்டு கின்றது. (23)

சார்ந்தாய் குருவாதிய வாய்விடை தன்னில்வந்தாய்
கூர்ந்தா யருளிற் பிறவாநெறி கூட்டுவித்தா
யோர்ந்தேன் குறையின்றெனினுங் குறையுண்டு கண்டாய்
பேர்ந்தோடுமெ னெஞ்சு னுன்னன்பு பிறக்குமட்டே.

(இ - ள்) குரு ஆதிய ஆய் சார்ந்தாய் - (தேவரீர்) குருமுத லியனவா (குரு லிங்க சங்கமமா)ய்ப் பொருந்தினீர், விடைதன்னில் வந்தாய் - இடபத்தில் ஆரோகணித்து அடியேனுக்குத் தரிசனங் கொடுத்தீர், அருளில் கூர்ந்தாய் - கிருபையில் மிக்கோனுய் விளங் கினீர், பிறவாநெறி கூட்டுவித்தாய் - முத்திமார்க்கத்தில் சேர்த்தீர், அல்லது, பிறவாநெறியாகிய திருப்பேரூரின்கண்ணே வசிக்கும் படி செய்தீர், ஓர்ந்தேன் குறை இன்று எனினும் - (இவற்றையெல் லாம்) விசாரித்துப் பார்த்தவனுகிய அடியேனுக்கு ஒரு விதமான குறைவு இல்லையென்ருலும், பேர்ந்து ஓடும் என் நெஞ்சுள் உன் அன்பு பிறக்குமட்டு குறை உண்டு - தரித்து நில்லாமல் (விடயங்க ளில்) ஓடுகின்ற அடியேனுடைய மனதில் தேவரீரிடத்தில் அன்பு பிறக்குமளவும் குறைபாடு (தவறு) உண்டு, (எ - று.) கண்டாய், முன்னிலையசை. மட்டே, என்பதில் ஏகாரம் அசைநிலை. (24)

பிறவா நெறியாகியதோர் திருப்பேரை யாவெம்
முறவேயறவே தவிர்ந்தென் மனமோடி வாடிப்
புறவாதனைபற்றி வளர்ந்திடு புன்மையாலின்
றிறவே யதனைப் புரிவா னுளத்தெண்ணுவாயே.

(இ - ள்.) ஓர் திருப்பேரையா - ஒப்பற்ற திருப்பேரூரில் (மேலைச் சிதம்பரத்தில்) எழுந்தருளிய குருவே! எம் உறவே - எம்மி



டத்தில் சிநேகமுடையவனே ! என் மனம், பிறவாநெறியாகியது அறவே தவிர்ந்து - மோக்ஷமார்க்கத்தினின்று முற்றிலும் விலகி, ஓடி வாடி - (விடயங்களில்) சீக்கிரமாய்ச்சென்று மொத்துண்டு, புறவாதனை பற்றி வளர்ந்திடு புன்மையால் - வெளி வருத்தத்தோடு பொருந்தி (சத்தாதிவிடய சம்ஸ்காரத்தினுல் உண்டாகின்ற வருத் தத்தோடுகூடி) வளரும் சிறுமையால், இன்று, அதனை இறவே புரி வான் உளத்து எண்ணுவாய் - அம்மனச்சேட்டை முற்றிலும் அற்றுப் போக திருவுளத்தில் கருதுவீராக. (மனம் அடங்கவேண்டுமென் பது கருத்து.) (எ - று,) ஏகாரம் அசைநிலை. (25)

எண்ணும் வடிவேதினி நீபுனைந் தெய்தினுலுந்
திண்ணம் மெனவா வகலாவச் சிதம்பரத்தே
நண்ணும் முனதுண்மையைக் காண நயந்துளேனென்
னுண்ணின் றதைக்காட்டுதற் கீச சற்றுன்னுவாயே.

(இ - ள்.) ஈச - பரமேசா! இனி நீ, எண்ணும் ஏது வடிவு புனைந்து எய்தினுலும் - (அன்பர்கள்) கருதுகின்ற எந்த வடிவத்தை அழகாக வடைந்தபோதிலும் (மாயையினுல் எவ்வளவு அழகான திரு மேனிகளை யெடுத்தபோதிலும்) அச்சிதம்பரத்தே நண்ணும் என் அவா திண்ணம் அகலா - அந்தச் சிதம்பரத்தின்கண்ணே (கனக சபையில் நடிக்கின்ற நடராஜ மூர்த்தத்தில்) இருக்கின்ற அடியே னுடைய ஆசை (அன்பு) மெய்யாய் (உண்மையாய்) நீங்காது, உனது உண்மையைக்காண நயந்துளேன் என் உள் நின்று - தேவரீருடைய உண்மை வடிவத்தையறிய விருப்புற்றிருக்கின்ற அடியேனது உள் ளத்திலே பொருந்தி நின்று, அதைக் காட்டுதற்கு - அவ்வுண்மைச் சொரூபத்தைச் சாக்ஷாத்கரிப்பதற்கு, சற்று உன்னுவாய் - சிறிது நினைத்தருள்வாய், (எ - று.) ஏகாரம் அசை. (26)

உன்னும் முணர்வுக்குணர்வா யெனக்குண்மை தந்தாய்
மன்னுஞ்சுருதிப் பொருளாய் வழிகாட்டி நின்ருய்

பின்னுங் குருவாயடைந்துன் னருள் பேணவைத்தா
யென்னென்றுரைப்பே னின்கருணை யிருந்த வாறே.

(இ - ள்) உன்னும் உணர்வுக்கு உணர்வாய் எனக்கு உண்மை தந்தாய் - (கடாதி பதார்த்தங்களை) அறிகின்ற அறிவிற்கு அறிவாய் (சிதாபாச ஜீவனுக்கு அதிஷ்டானமாய்) தேவரீர் இருக்கின்றீரென்கிற உண்மையை அடியேனுக்கு அறிவித்தீர், மன்னும் சுருதிப் பொருளாய் வழிகாட்டி நின்றாய் - நிலைபெற்ற (அனாதியான) வேதார்த்த ரூபமாய் (முத்திக்கு) உரிய வழியைக்காட்டி நின்றீர், பின்னும் குரு ஆய் அடைந்து உன் அருள் பேண வைத்தாய் - அன்றியும் குருவடிவமாய் எழுந்தருளிவந்து தேவரீரது திருவருளை விரும்பும்படி செய்தீர் (சுருதி, குரு, சுவானுபவரூபமாய் தேவரீர் நின்றீரென்றபடி), நின்கருணை இருந்த ஆறு என் என்று உரைப்பேன் - தேவரீருடைய கிருபை (அடியேனிடத்தில்) இருந்த தன்மையை எவ்விதங் கூறுவேன்? (சொல்லமுடியாதென்பதாம்,) (எ - று.) ஏகாரம் அசை நிலை.

(27)

இருந்தோரு மிடத்துணர் வில்லைமாயைக் கிதன்பாற்
பொருந்தா விடத்தில்லை யுயிர்க்கொரு போதமேனுந்
திருந்தாவிவை கொண்டிறையைந் தொழில் செய்தியென்றே
வருந்தாவருண் முன்னிலை தன்னை மதித்தியானே.

(இ - ள்) இருந்து, ஓரும் இடத்து மாயைக்கு உணர்வில்லை - விசாரித்துப்பார்க்குமிடத்து மாயைக்கு சேதனத்தன்மையில்லை (மாயை ஜடமாயிருக்கின்றது), இதன்பால் பொருந்தாவிடத்து உயிர்க்கு ஒரு போதமேனும் இல்லை - இம்மாயையோடு சம்பந்தமின்றாய விடத்து (மாயாகாரியமான புத்தி முதலிய உபாதியோடு சேராதவிடத்து) உயிர்க்கு ஒரு சிறிது ஞானமுமில்லை, திருந்தா இவை கொண்டு-சுதந்தரமின்றிய இம்மாயையையும் ஜீவர்களையுங் கொண்டு-இறை ஐந்தொழில் செய்தி என்று - (சுதந்தரானாகிய) இறைவன் சிருட்டியாதி (சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரக

பின்னுங் குருவாயடைந்துன் னருள் பேணவைத்தா
யென்னென்றுரைப்பே னின்கருணை யிருந்த வாறே.

(இ - ள்) உன்னும் உணர்வுக்கு உணர்வாய் எனக்கு உண்மை தந்தாய் - (கடாதி பதார்த்தங்களை) அறிகின்ற அறிவிற்கு அறிவாய் (சிதாபாச ஜீவனுக்கு அதிஷ்டானமாய்) தேவரீர் இருக்கின்றீரென்கிற உண்மையை அடியேனுக்கு அறிவித்தீர், மன்னும் சுருதிப் பொருளாய் வழிகாட்டி நின்றாய் - நிலைபெற்ற (அனுதியான) வேதார்த்த ரூபமாய் (முத்திக்கு) உரிய வழியைக்காட்டி நின்றீர், பின்னும் குரு ஆய் அடைந்து உன் அருள் பேண வைத்தாய் - அன்றியும் குருவடிவமாய் எழுந்தருளிவந்து தேவரீரது திருவருளை விரும்பும்படி செய்தீர் (சுருதி, குரு, சுவானுபவரூபமாய் தேவரீர் நின்றீரென்றபடி), நின்கருணை இருந்த ஆறு என் என்று உரைப்பேன் - தேவரீருடைய கிருபை (அடியேனிடத்தில்) இருந்த தன்மையை எவ்விதங் கூறுவேன்? (சொல்லமுடியாதென்பதாம்,) (எ - று.) ஏகாரம் அசை நிலை. (27)

இருந்தோரு மிடத்துணர் வில்லைமாயைக் கிதன்பாற்
பொருந்தா விடத்தில்லை யுயிர்க்கொரு போதமேனுந்
திருந்தாவிவை கொண்டிறையைந் தொழில் செய்தியென்றே
வருந்தாவருண் முன்னிலை தன்னை மதித்தியானே.

(இ - ள்) இருந்து, ஒரும் இடத்து மாயைக்கு உணர்வில்லை - விசாரித்துப்பார்க்குமிடத்து மாயைக்கு சேதனத்தன்மையில்லை (மாயை ஜடமாயிருக்கின்றது), இதன்பால் பொருந்தாவிடத்து உயிர்க்கு ஒரு போதமேனும் இல்லை - இம்மாயையோடு சம்பந்தமின்றாய விடத்து (மாயாகாரியமான புத்தி முதலிய உபாதியோடு சேராதவிடத்து) உயிர்க்கு ஒரு சிறிது ஞானமுமில்லை, திருந்தா இவை கொண்டு-சுதந்தரமின்றிய இம்மாயையையும் ஜீவர்களையுங் கொண்டு-இறை ஐந்தொழில் செய்தி என்று - (சுதந்தரனுகிய) இறைவன் சிருட்டியாதி (சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரக



மென்னும்) பஞ்சகிருத்தியங்களும் செய்கின்றுனென்றும், யான், முன்னிலை தன்னை மதித்து வருந்தா அருள் - (ஜீவர்கள்) முன்னிலையாக (சுகதுக்கம் வருகிறதென்பதை)க் கருதி வருந்துகின்றதை நீக்கியும் கிருபை செய்வீர், (எ - று.) ஏகாரம் இரண்டும் அசைநிலைகள்.

மதித்தென் பருவத்தளவிற் குரு வாதியாகி
யுதித்துள் ளறிவோங்கும் வகைக்குபாயஞ் செய்தோயை
யெதிர்த்திங்ஙனஞ் சற்குரு சற்குருவென்று நைந்துந்
துதித்துந் திரியாவெனக் கின்னருடந்து தோன்றே.

(இ - ள்.) என், பருவத்தளவில் மதித்து - பக்குவத்திற்குத் தகுந்தபடி நிச்சயித்து, குரு ஆதியாகி உதித்து - குரு முதலியவாய் (குரு லிங்க, சங்கமமாய் ; குரு, சாத்திரரூபமாய்)த் தோன்றி, உள் அறிவு ஓங்கும் வகைக்கு உபாயம் செய்தோயை - மனதில் உணர்வு (விசாரம்) வளரும்படிக்கு (எல்லாம் தேவரீர் வடிவமென்கின்ற விசாரந்தோன்றும்படிக்கு) தந்திரம் (வகை) செய்த தேவரீரை, எதிர்த்து சற்குரு சற்குரு என்று இங்ஙனம் - எதிர்கொண்டு (சன்னிதியில் நின்று) சத்தையுபதேசித்த குருவே! சத்தையுபதேசித்த குருவே! என இவ்வாறு, நைந்தும் துதித்தும் திரியா எனக்கு - இரங்கியும் தோத்திரஞ்செய்தும் திரிகின்ற அடியேனுக்கு, இன் அருள் தந்து தோன்று - தெவரீர் அடியேன்மீது அருள்சுரந்து தரிசனந்தருவீராக, (எ-று.) ஏகாரம் அசை நிலை. (29;

தோன்றுமன் முளிந்தொரு தாய்வயிற் றோன்றுபால
ரீன்றுடனைத் தம்மின் வேறுக்கொடி கழ்ந்தவாபோற்
பூன்றுவொரு நீயருளாற் புனை மேனியெல்லாம்
யான்றுன் பல தெய்வமெனக் கொடிகழ்ந்தவாறே.

(இ - ள்.) பூன்று - பரிபூரணனுன, ஒரு நீ, அருளால்புனை மேனியெல்லாம் - (அன்பர்களிடத்துள்ள) கிருபையினுல் தரிக்கின்ற சரீர (வடிவ)மெல்லாம், யான், பல தெய்வமெனக்கொடு இகழ்ந்த

வாறு - பலதெய்வங்களென்று நினைத்து இகழ்ந்த தன்மையானது, ஒரு தாய் வயின் தோன்றுபாலர் - ஒரு தாயினுடைய வயிற்றிலுண்டான பிள்ளைகள், தோன்றுமன் முனிந்து - (தாங்கள் ஒரு தாய் வயிற்றில் பிறந்திருக்கின்றோ மென்கிற) விசாரமில்லாமல் கோபித்து, ஈன்றாள் தனை தம்மின் வேறுக்கொடு இகழ்ந்தவாபோல் - தாயைத் தமக் கயலாக நினைத்து இகழ்ந்த தன்மையை யொத்திருக்கின்றது. (பரிபூரணனான பரமேசுவரனிடத்திலிருந்து நானாவிதமான ஜீவேசுவர பேதங்கள் தோன்றா நிற்க, ஜீவர்கள் அறியாமையினால் அவ்வகையான வடிவங்களைத் தூஷணம் புரிகின்றனர் என்பது கருத்து), (எ - று:) தான், ஏ அசைநிலைகள்.

(30)

இகழும் பொருளொன்றிலை மண்முத லெட்டுமெந்தாய்
நிகழுன்வடிவே யெனத்தேர்ந்துள நெக்கு நின்றாட்
புகழும்படியேயினி யீசவென் புத்திதன்னைத்
திகழும்படி செய்தி திரோபவஞ் செய்திடேலே

(இ - ள்.) எந்தாய் - எனது தந்தையே! இகழும் பொருள் ஒன்றிலை - (இவ்வுலகில்) நிந்திக்கத்தக்க பொருள் ஒன்றுமில்லை, மண்முதல் எட்டும் நிகழ் உன் வடிவே எனத்தேர்ந்து - மண் முதலாக எண்வகைப் பொருளும் (பஞ்சபூதம், சூரியன், சந்திரன், ஜீவன்) விளங்காநின்ற தேவரீருடைய சொரூபமே யென்று தெளிந்து, உளம் நெக்கு நின் தாள் புகழும்படி - மனமுருகித் தேவரீர் திருவடியைத் தோத்திரம் பண்ணும்படி, ஈச இனி என் புத்தி தன்னைத் திகழும்படி செய்தி - பரமேச! இனி அடியேனுடைய புத்தியை விளங்கும்படி செய்வாய், திரோபவம் செய்திடேலே - (யானெனதென்கின்ற அகந்தை மமதைகளால் புத்தியை) மறைத்துவிடாதே, (எ - று.) ஏகாரம் அசைநிலை.

(31)

செய்யாய் கரியான்றொழும் வெள்ளிளஞ் சேவையூர்வோய்
வையார் மழுவோய் திருவுள்ள மிவ்வஞ்சனேனு



மையா விழிபெய் வுறநீர் பெரிதன்பினேடு
கையாற் றொழுதேத்தி நின்கூத்தினைக் காணுமாறே.

(இ - ள்.) வெள் இளம் சேவை ஊர்வோய் - இளம் பருவத்தையுடைய வெண்மையான இடபத்தின்மீது ஊர்ந்து செல்பவனே! வை ஆர் மழுவோய் - கூர்மைபொருந்திய மழுவாயுதத்தையுடையவனே! ஐயா - (எனது) தந்தையே! இவ்வஞ்சனேனும் விழி நீர்பெய்வுற பெரிதன்பினேடு கையால் தொழுது ஏத்தி - இவ்வஞ்சகனான அடியேனும் கண்ணீர் பெருகாநிற்க மிகுந்த பக்தியோடு இருகரங்களையுங் குவித்துத் தேவரீரைத் தொழுது தோத்திரஞ் செய்து, கரியான் தொழும் நின் கூத்தினைக் காணுமாறு திருவுள்ளம் செய்யாய் - விஷ்ணுதொழுகின்ற தேவரீரது திரு நடனத்தை (யானும்) தரிசிக்கும்படி திருவுள்ளத்தில் நினைப்பீராக, (எ - று.) ஏகாரம் அசைநிலை.

(32)

காணாத பவக்கடலின் கரைகாண வெற்குக்
கோணா கணிமார்ப மெய்யன்பு கொடுத்தியென்றே
நாணா திசைத்தேன் றிருக்காளத்தி நாதவுன்றாட்
பேணாத வலக்கடன் மூழ்கிய பேதையேனே.

(இ - ள்.) கோள் நாகம் அணி மார்ப - வலிமைபொருந்திய சர்ப்பங்களை யணிந்திருக்கின்ற மார்பையுடையவனே! (எனது உபாசனா மூர்த்தமே!), திருக்காளத்தி நாத - திருக்காளத்தியில் சிலகாலம் வசித்த எனது ஆசிரிய மூர்த்தமே! உன் தாள் பேணாது அவலக் கடல் மூழ்கிய பேதையேன் - தேவரீருடைய திருவடியை விரும்பாது துன்ப சமுத்திரத்தில் அமிழ்ந்த அறிவிலியாகிய அடியேன், காணாத பவக்கடலின் கரை காண - (அனதிகாரிகளால்) அறியமுடியாத பிறவிக்கடலின் தீரத்தையறியும்படி, எற்கு மெய்யன்பு கொடுத்தி என்று நாணாது இசைத்தேன் - அடியேனுக்கு (தேவரீர்) உண்மையான அன்பையருளினீர் என்று வெட்கமின்றி விளம்பினேன்,

(எ - று.) ஏகாரம் இரண்டும் அசைநிலை. நாகம், என்றதில் ஈற்று மகரமெய் கடைக்குறை விகாரம் பெற்றது. (33)

பேதைக் கொருபாக மளித்திடு பேரையாவெங்
கோதைக்கு நின்றோளுறு கோதைகொடென்று நின்பா
லோதற் கெனுளத்தை விடுத்தன னோடிமாதர்
காதற்களை யுண்டமையா லுனைக் கண்டதின்றே.

(இ - ள்.) பேதைக்கு ஒரு பாகம் அளித்திடு பேரையா - பெண்ணுக்கு (உமாமகேசுவரிக்கு) ஒரு பாதியை (இடப்பாகத்தை)க் கொடுத்திட்ட, திருப்பேரூரில் திருநடம்புரியும் எமது இறைவா ! எம் கோதைக்கு நின் தோள் உறு கோதை கொடு என்று ஓதற்கு - எனது பெண்ணிற்குத் (தலைவியான ஜீவனுக்கு) தேவரீரது திரு மார்பில் பொருந்தியிருக்கின்ற பூமாலையைக் கொடுத்தருள்வீரென்று கூறுவதற்கு, நின்பால் என் உளத்தை விடுத்தனன் - தேவரீரிடத்தில் என் மனதைத் தூதாக அனுப்பினேன், (அது) ஓடி மாதர் காதல்களை யுண்டமையால் உனைக் கண்டதின்று - (அம்மனம்) சீக்கிரமாய்ச் சென்று (இடையே பெண்ணாசை யென்கின்ற கள்ளை யுண்டு மயக்கமுற்றமையால் தேவரீரைத் தரிசிக்கவில்லை (அறியவில்லை), (எ - று.) இது, தலைவன் அனுக்கிரகத்தைப்பெற மனதைத் தூதாகவனுப்ப, அம்மனம் மாதராசையா விடையூறடைந்ததைத் தலைவி தலைவனிடங் கூறல். நின்பாலோதற்கு என்றுமாம். ஏகாரம் அசை. (34)

கண்டேன் களிகூர்ந்து சிவப்பிரகாச நாமங்
கொண்டோங் குருவோடிவணுற் றெனையாண்ட கோவே
பண்டேயொரு நீ வகுத்திட்டபடிக்கி யானுன்
றொண்டாகி வந்தின் றுனைப் பாடத் தொடங்கினேனே.

(இ - ள்) சிவப்பிரகாச நாமங்கொண்டு ஓங்கு உருவோடு இவண் உற்று - சிவப்பிரகாசமென்ற திருநாமத்தோடுகூட அழகான



(மனித) வடிவோடு இம்மண்ணுலகத்தில் பொருந்தி, எனை ஆண்ட கோவே களிகூர்ந்து கண்டேன் - அடியேனைக் காப்பாற்றிய (ஆட்கொண்ட) இறைவனை மிகக் களிப்போடு (மனமகிழ்ச்சியோடு) தரிசித்தேன், ஒரு நீ, பண்டு வகுத்திட்டபடிக்கு - முற்காலத்தில் (கருமானுசாரமாய்) கிரமப்படுத்திய வண்ணம், இன்று யான் உன் தொண்டாகி வந்து உனைப்பாடத் தொடங்கினேன் - இன்று அடியேன் தேவரீருக்கு அடிமையாய்வந்து தேவரீரைத் தோத்திரஞ் செய்ய ஆரம்பித்தேன், (எ - று-) ஏகாரம் இரண்டும் அசைநிலைகள்.

தொடக்கா யெனைச்சூழ்ந்துள வைம்புலத் தோற்றமெல்லாங்
கெடக்கூறுதி நீயொரு சூட்சி கிளக்கிலாயே
லடக்கா வவையென்ற னகத்து ளடங்குகாறுங்
கடக்கேன் பவவேலை யெவ்வண்ண முக்கண்ணினானே.

(இ - ள்) முக்கண்ணினானே! எனை, தொடக்காய்ச்சூழ்ந்துள ஐம்புலத்தோற்றமெல்லாம் கெட நீ ஒரு சூட்சி கூறுதி - கட்டுப்படுத்துவதற்குச் சார்ந்திருக்கின்ற பஞ்சேந்திரியங்களின் (விடயங்களிற் செல்கின்ற) வலியெல்லாம் நாசமாகத் தேவரீர் ஒருபாயம் அருள்வீராக. கிளக்கிலாயேல் அடக்கா அவை என்றன் அகத்துள் அடங்குகாறும் பவவேலை எவ்வண்ணம் கடக்கேன் - கூறாதிருப்பீரேல் (சாதனரகிதரால்) அடக்கமுடியாத அவ்விந்திரியங்கள் அடியேனுடைய மனதில் அடங்குமட்டும் பிறவிச் சமுத்திரத்தை எவ்விதத்தினாலுந் தாண்டமுடியாது. (எ - று) (36)

கண்ணான்மதனைப் பொடியாம் வகைகண்ட வெண்டோ
ளண்ணாவுயிர் யாவு மளித்திடு மப்பனேயோ
தண்ணார்பொழிற் றில்லையுளா யெனக்கீது தாராய்
மண்ணாதிய வாசைகளற்றுனை வாழ்த்து மாறே.

(இ - ள்) கண்ணால் மதனைப் பொடி ஆம் வகை கண்ட எண் தோள் அண்ணா - (நெற்றிக்) கண்ணால் காமதேவனைச் சாம்பலாகும்படி பார்த்த எட்டுபுஜங்களையுடைய அடியேனது அண்ணாவே !

(மேன்மையுடையவனே !), உயிர் யாவும் அளித்திடும் அப்பனே - எவ்வுயிர்களையும் (கருமானுசாரமாய்க்) காப்பாற்றுகின்ற தந்தையே ! தண் ஆர் பொழில் தில்லை உளாய் - குளிர்ச்சி பொருந்திய சோலைகளையுடைய சிதம்பரத்தின் கண்ணே திருநடம்புரிவோனே ! மண் ஆதிய ஆசைகளற்று உனை வாழ்த்துமாறு எனக்கு ஈது தாராய் - பூமி முதலிய (இடம்பொருள், ஏவல், மனைவி) வற்றில் இச்சை நீங்கி (மனத்தூய்மை யடைந்து) தேவரீரைத் தோத்திரஞ்செய்யும் படி அடியேனுக்கனுக்கிரகஞ் செய்வீராக; (எ று.) ஒ, ஏ அசைநிலைகள். (37)

வாழ்த்தேனுனை நாடொறும் வாழ்த்தவல்லோர்க டாளிற்
றாழ்த்தேன் றலையாங்கவரேவ றலைக்கொள் கில்லேன்
வீழ்த்தே னெடுங்கால மவத்திலொண்மேரு வில்லோய்
பாழ்த்தேன்கிளி போற்பல நூல்கள் படித்துமியானே.

(இ - ள்.) ஒண் மேரு வில்லோய் - பிரகாசம்பொருந்திய (பொன்மயமான) மேருமலையை வில்லாய்த் தரித்தவனே ! உனை, நாள்தொறும் வாழ்த்தேன் - தினந்தோறுந் துதித்தேனில்லை - வாழ்த்த வல்லோர்கள் தாளில் தலை தாழ்த்தேன்-தோத்திரஞ்செய்ய சாமர்த்தியமுடைய பெரியோர்கள் திருவடியில் சாஷ்டாங்கமுதலிய மூவித நமஸ்காரம் செய்தேனில்லை, அவர் ஏவல் தலைக்கொள்கில்லேன் - அவர்களுடைய திருத்தொண்டை சிரசினால் அங்கீகாரஞ் செய்து அவற்றைச் செய்தேனுமில்லை, நெடுங்காலம் அவத்தில் வீழ்த்தேன் - அனேகநாள் வீண்தொழிலில் போக்கினேன், யான் கிளி போல், பல நூல்கள் படித்தும் பாழ்த்தேன் - பலசாத்திரங்கள் கற்றும் (சாரத்தைக் கிரகிக்காததால்) அவற்றையும் பாழாக்கினேன், (எ - று.) ஆங்கு, ஏ - அசைச்சொற்கள். (38)

யானுருடற்கின்ப துன்பங்களை யெண்ண வெண்ணித்
தானே சிறுபாலரினென் மனஞ் சஞ்சலிக்கு



மீனுயினன் பாலல தென்கண் விடுத்திகொல்லோ
வானேறுடையாய் திதியா மதிகார நீயே.

(இ - ள்.) ஆன் ஏறு உடையாய் - இடபத்தை வாகனமாயுடையவனே ! உடற்கு இன்ப துன்பங்களை எண்ண யான் ஆர் - உடம்புக்கு (கருமாதீனமாய்) வருகின்ற சுக துக்கங்களைக்குறித்து நினைக்க எனக்கு என்ன அதிகார (சுதந்தர)மிருக்கின்றது ? (இல்லையென்றபடி), எண்ணி சிறு பாலரின் என்மனம் சஞ்சலிக்கும் - (சுகம் வந்துழி அது நீங்காமலிருப்பதற்கும், துக்கந் தோன்றுமிடத்து அதையொழிப்பதற்கும் நானுவுபாயங்களை) நினைத்து சிறுபிள்ளைகளின் மனதைப்போல என் மனங் கலக்கமுற்றிருக்கும் (அசைந்து கொண்டிருக்கும்), நீ திதியாம் அதிகாரம் மீன் ஆயினன்பால் அலது என்கண் விடுத்திகொல் - தேவரீர் காத்தல்தொழில் தலைமை மச்சாவதாரமெடுத்த ஸ்ரீமந் நாராயணனிடத்தன்றி அடியேனிடத்தில் ஒப்புவித் திருக்கின்றீரா ? (இல்லையென்பதாம்), (எ - று.) தான், ஏ, ஓ, ஏ அசைநிலைகள். (39)

காரார் மிடற்றாயளி சூழ்தரு பொற்கடுக்கைத்
தாரார் புயனே சிவகாம சவுந்தரிக்கோர்
சீரார் மணவாளவென்றன் குலதெய்வமே நீ
பாராய் கடைக்கண்ணெனதெண்ணம் பலிக்கவின்றே.

(இ - ள்.) கார் ஆர் மிடற்றாய் - கருமை (விடம்) பொருந்திய கழுத்தையுடையவனே! அளி சூழ்தரு பொற்கடுக்கைத் தாரார் புயனே - வண்டுகள் மொய்க்கின்ற பொன்னிறமான கொன்றைப் புஷ்பங்களால் தொடுக்கப் பெற்ற மாலை பொருந்திய தோள்களையுடையவனே ! சிவகாம சவுந்தரிக்கு ஓர் சீர் ஆர் மணவாள - சிவகாமசவுந்தரியென்கின்ற திருநாமத்தையுடைய உமாமகேசுவரிக்கு ஒப்பற்ற சிறப்புமிகுந்த கணவனே ! என்தன் குல தெய்வமே - அடியேனுடைய குலத்தார் (சாதி, மனைக்காரர்) வழிபடுகின்ற கடவுளே ! இன்று நீ, எனது எண்ணம் பலிக்க கடைக்கண் பாராய் - அடி

யேனுடைய (மோக்ஷமடைய வேண்டுமென்கின்ற) சங்கற்பம் முடிவு பெறும்படி கிருபையோடுகூடி கடைக்கண் பார்வையைச் செலுத்தி அருள்வீராக, (எ-று.) இன்றே - என்பதில் ஏகாரம் அசைநிலை. (40)

இன்றென்னை செய்கேனென நாடியிருந்த தீயேற்
கொன்றெய்தி னெவ்வண்ண மறும்மதை யோதுவேனே
வன்றன்னமு மேனமுமோர் வருமைய நின்று
ளொன்றன்பர் குழாத்துற வீதருளாயு வந்தே.

(இ - ள்.) அன்று அன்னமும் ஏனமும் ஓர்வு அரும் ஐய - அக்காலத்தில் அன்னப்புள்வடிவ பிரம்மாவும், வராகவடிவ விஷ்ணுவும் அறிதற்கரிய இறைவ! இன்று என்ன செய்கேன் என நாடி இருந்த தீயேற்கு - இப்போது (பிறப்பை நீக்குதற்கு) என்ன வுபாயஞ் செய்யலாம்? என்று நினைத்திருக்கின்ற இழிந்த தன்மையையுடைய அடியேனுக்கு, ஒன்று எய்தின் எவ்வண்ணம் அறும் - ஒரு சாதனமாத்திரங் கிடைத்தால் எவ்விதத்தாலும் (பிறவி) நீங்கும், அதை ஓதுவேன் - அச்சாதனத்தைக் கூறுவேன், நின் தாள் ஒன்று அன்பர்குழாத்து உற - தேவரீருடைய திருவடியையடைந்த அன்பர்களின் கூட்டத்தில் (சாதுசங்கத்தில்) பொருந்த, ஈது உவந்து அருளாய் - (பெரியோர்களின் கூட்டத்தில் அடியேனிருக்கும்படியான) இதைத் தேவரீர் மகிழ்ந்து அருள்வீராக, (எ - று.) ஓ, ஏ அசைநிலைகள். (41)

உவந்தாயென தைம்புலனும் மிரிந்தோடவோர் நாட்
டவந்தான் சிறிதும் மிலிபால் விடைதன்னின் மின்னோ
டிவர்ந்தேவர நாளும் விளங்கிலை யென்னைகொல்லோ
வவந்தான்மிகு பாவியுன் லீலை யறிந்திலேனே.

(இ - ள்.) எனது ஐம்புலனும் இரிந்து ஓட சிறிதும் தவம் இலிபால் - அடியேனுடைய பஞ்சேந்திரியங்களும் (விவேகமான என்னினின்று) பிரிந்து (விடயங்களில்) சீக்கிரமாய்ச் செல்ல, அற்பமேனுந் தவம் (மனம் பொறிகட் கொருமை) இன்றிய அடியேனிடத்தில், ஓர் நாள் மின்னோடு விடைதன்னில் இவர்ந்துவர உவந்தாய் - ஒருதினம் மின்போன்ற இடையையுடைய உமாதேவியோடு இடபத்தின்மீ தமர்ந்துவந்து தரிசனந்தர பிரியப்பட்டீர், (அன்னோர்) நாளும் விளங்கிலை என்னைகொல் - (அப்படிப்பட்டவர்) பின்னொரு நாளாயினுந் தோற்றப்படவில்லை (தரிசனந் தரவில்லை) (இதற்கு) என்ன காரணம்? அவந்தான் மிகுபாவி உன் லீலை அறிந்திலேன் - வீணுகத்திரிகின்ற கொடிய பாவியான அடியேன் தேவரீருடைய திருவிளையாடலின் தன்மையை அறியாதவனானேன், (எ - று.) ஓ, ஏ அசைநிலைகள். (42)

அறியாமையிற் கட்டுண லுற்ற தென்னுண்மையத்தைப்
பிறியாது விடேனென லெந்தைபிரானு னுண்மை
குறியீதிருவர்க்கு மென்றாலெனைக் கோபியேலே
செறிவாய் மலமே யிறையோடிகல் செய்ததன்றே.

(இ - ள்.) எந்தைபிரான் - எனது தந்தையான இறைவா! என் ஆண்மை அறியாமையில் கட்டுணலுற்றது - அடியேனுடைய சாமர்த்தியம் (சுதந்தரம்) அஞ்ஞானத்தில் கட்டுண்டிருக்கின்றது (அடியேன் அஞ்ஞானத்தில் வயப்பட்டிருப்பது), உன் ஆண்மை அத்தைப் பிறியாது விடேன் எனல் - தேவரீருடைய சுதந்தரம் அந்த அறியாமையைப் பிரிக்காமல் விடமாட்டேன் (பிரித்து விடுவேன்) என்பது, ஈது இருவர்க்கும் குறி என்றால் - இது (ஜீவ, ஈசுவரர்) இருவர்க்கும் தர்மமாமெனில், எனைக் கோபியேல் - அடியேனிடத்தில் கோபிக்க வேண்டாம், செறிவாய் மலமே இறையோடு இகல் செய்தது - நெருங்கின அஞ்ஞானமே தேவரீரோடு பகைத்தது, (எ - று.) ஏகாரமிரண்டும் அசைநிலைகள். பிரியாது என்பது எதுகைநோக்கிப் பிறியாது எனத் திரிந்தது. (43)

செய்விப்பன் வினைத்தொகை வெம்பவஞ் சேர்ப்பனுன்னை
யுய்விப்பனே லச்சிவனுண்மையு மோர்வனென்றே

ரைவர்க்கெதிரே யெனைநோக்கிய றைந்ததையா
மைவெற்பன வாணவ நீயதை மாற்றிடாயே.

(இ - ள்.) ஐயா மைவெற்பு அன ஆணவம் ஓர் ஐவர்க்கு எதிரே எனை நோக்கி - ஐயனே! கரியபர்வதம்போன்ற ஆணவம் (மூலாஞ்ஞானம்) ஒப்பற்ற ஐவர் (ஞானேந்திரியங்கள்) முன்னிலையில் அடியேனைப்பார்த்து - உன்னை வினைத்தொகை செய்விப்பன் வெம்பவம் சேர்ப்பன் உய்விப்பனேல் அச்சிவன் ஆண்மையும் ஓர்வன் என்று அறைந்தது - "(விவேகமே) உன்னைப்பல தீவினைகள் இயற்றும்படி செய்வேன் (அதன்வாயிலாக சிங்க ஸர்ப்பாதி) கொடிய பிறவிகளை யடையும்படி செய்வேன், (உன்னை, அப்பிறப்புகளிலிருந்து) மேன்மை யடையும்படிசெய்தால் அங்ஙனஞ்செய்கின்ற அச்சிவனுடைய சாமர்த்தியத்தையும் ஆராய்வேன் (சிவனுற்றலையுங் கெடுப்பேன்)" என்று கூறினது, நீ அதை மாற்றிடாய் - தேவரீர், அங்ஙனம் (அதிக்கிரமித்துக்) கூறிய அவ்வாணவத்தை (எவ்விதத்தினும்) நாசஞ் செய்திடுவீராக, (எ - று.) ஏகாரம் அசைநிலை. (44)

மாற்றுயெனக் காணவ மாயையில் வந்துவந்தே
தோற்றுவுள கேவல மாதிய சுத்த மொன்றா
டேற்றுயவ ணேற்றி யிரண்டறுத் தெங்குமாகிக்
கூற்றுவி கொள்பதத் தென்னுவியுங் கொள்ளுவாயே.

(இ - ள்) எனக்கு ஆணவமாயையில் வந்து வந்துதோற்று உள கேவலம் ஆதியமாற்றாய் - அடியேனுக்கு ஆணவத்தாலும் மாயையினுலும் மாறிமாறியுண்டாகின்ற கேவலம் முதலிய (கேவலம்-சுழுத்தி, சகலம் - ஜாக்கிர சொப்பனம்.) அவஸ்தைகள் இல்லாமலிருக்கும்படி செய்வாய், சுத்தம் ஒன்றாடு ஏற்றாய் - சுத்தாவஸ்தையான துரிய நிலையொன்றில் இருக்கும்படி யருள்வாய், அவண் ஏற்றி இரண்டறுத்து எங்குமாகிக் கூற்று ஆவி கொள் பதத்து என் ஆவியும் கொள்ளுவாய் - அந்தத் துரியாவஸ்தையில் வாழ்வித்து துவித பாவனை நீக்கி ஸர்வ வியாபகமாய் காலனுடைய உயிரைக்கொண்ட



திருவடியில் (காலாதீதமான பரம்பொருளில்) அடியேனுடைய உயிரையும் சேரும்படி செய்வாய் (புரியஷ்டகசரீரம் உடம்பைவிட்டு வெளியேசென்று பிறப்பிறப்பையடையாமல், அந்தக்கரண அவச்சின்ன சேதனமான தேவரீர் திருவடியில் இலயமாகும்படி செய்வீராக.) (எ - று.) ஏகார மிரண்டும் அசைநிலைகள். (45)

கொள்ளேனெனினு மெழுத்தைந்து முட்கோதி யாதுந்
தள்ளே னெனினு முனைச்சார்த வஞ்சார்ந்திலாரை
விள்ளேனெனினு மெனைநீ கைவிடேல் விடேல்கா
ணள்ளா றுடையாயவி நாசி நயந்துளானே.

(இ - ள்) நள்ளாறுடையாய் அவிநாசி நயந்துளானே - திருநள்ளாறு என்கின்ற நதிரூபமான தீர்த்தத்தையுடைய அவிநாசித் திருப்பதியில் ஆனந்த நடனஞ் செய்கின்றவனே! எழுத்து ஐந்தும் கொள்ளேன் எனினும் - தேவரீருடைய திருநாமமான பஞ்சாக்கரத்தை ஸ்மரிக்காதவ (ஜெபிக்காதவ) னுயிருந்தபோதிலும், உள்கோது யாதும் தள்ளேன் எனினும் - மனதிலுள்ள (இராகத்துவேடாதி) குற்றங்களில் எதனையும் நீக்காமலிருந்தபோதிலும், உனைச் சார்தவம் சார்ந்திலாரை விள்ளேன் எனினும் - தேவரீரை யடைவதற்குரிய தவம் செய்யாதவர்களை விட்டு நீங்காமல் இருந்தபோதிலும் (பாமரஜனங்களோடு கூடியிருந்தபோதிலும்) எனை நீ கைவிடேல் விடேல் - அடியேனைத் தேவரீர் கைசோர விடாதீர்! விடாதீர்! (எ - று) விடேல் விடேல், என்றதால், தன்னைக்கைசோர விடுதல் முற்றிலுங் கூடாது என்பதை வற்புறுத்தியதாம். காண் என்பது இடைச்சொல், நள்ளாறு - ஒருதலமுமாம். அவினுசி யென்பது, கொங்கு நாட்டில் பாடல்பெற்ற ஏழுதிருப்பதிகளில் ஒன்று.

நயவாது தில்லாபுரியோயுனை நாடிநாளும்
வியவாதுடலோடுற வென்றும் விடாதென் னுள்ளங்
கயவாதுறு போகமெலா மிவை கண்டுவீடும்
பயவாதி தென்றே பயந்தேன் மிகப்பாவியேனே.

(இ - ள்) மிகப் பாவியேன் - கொடிய பாவியான அடியேன், தில்லாபுரியோய் உனை நாளும் நாடி நயவாது வியவாது - தில்லைப் பதியில் நடனம்புரிகின்ற தேவரீரைத் தினமும்நினைத்து பிரியமாய்க் கொண்டாடாமலும், என்றும் உடலோடு உறவு விடாது - எப்போதும் உடலோடு பொருந்தியிருக்கும்படியான ஆசையை நீக்காமலும் என் உள்ளம் உறு போகம் எலாம்கயவாது - அடியேனுடைய மனம் (கருமாதீனமாய்) வருகின்ற போகங்களில் வெறுப்பில்லாமலும் இருக்கின்ற, இவைகண்டு இது வீடும் பயவாது என்று பயந்தேன் - இங்ஙனமெல்லாமிருப்பதால் இம்மனம் முத்தியையும் சாதிக்கமாட்டாதென்று அஞ்சினேன், (எ - று,) ஏகாரமிரண்டும் அசைநிலைகள்.(47)

பாவாற் பெரியோர்புகழ் சிற்றம்பலத்து ளோயை
நாவாற் சிறியேன் றுதிசெய்யு மிந்நன்கில்சொல்லு
மோவாதிரை யோருழை தாவியவுன் செவிக்கே
மேவா தலவென்று துணிந்து விளம்பினேனே.

(இ - ள்.) பெரியோர் பா வால் புகழ் சித் அம்பலத்து உளோயை - பெரியோர்கள் நானாவிதமான பாசுரங்களால் துதிக்கின்ற ஞானசபையில் நடம் புரிவோனே! ஓர் உழை ஓவாது இரை தாவிய உன் செவிக்கு - ஒரு (ஒப்பற்ற) மான் ஓய்வின்றி இரைத்து (கத்தி) வருத்திய தேவரீருடைய திருச்செவிக்கு - சிறியேன் நாவால் துதி செய்யும் இந் நன்கு இல் சொல்லும் மேவாதல என்று துணிந்து விளம்பினேன் - (கல்வியறிவொழுக்கங்களற்ற) அற்பனாகிய அடியேன் நாவினால் துதிக்கின்ற இந்த நலமற்ற (சொற்சுவை பொருட்சுவை பொருந்தா) சொற்களும் பொருந்தாததல்லவென்று நிச்சயித்து (இத்தோத்திரங்களைத் தேவரீர் சன்னிதானத்தில்) பாடினேன், (எ று.) ஏகார மிரண்டும் அசைநிலைகள்: (48)

விளம்பற் கருஞ்சோதியென் கோவிடையோ னென்கோவென்
னுளம்புக்க சிவப்பிரகாச னென்கோ வென்னங்கைத்



தளம்பற்றிய சாந்தனென்கோ நின்றனது நாமம்
வளம்பெற்ற திருக்கயிலாய சொல்வா யெனக்கே.

(இ - ள்) வளம்பெற்ற திருக்கயிலாய - சகல வளப்பங்களும் பொருந்தி மேன்மைமிக்க கயிலாயத்தில் வீற்றிருக்கின்றவரே! (திருக்கயிலாய பரம்பரையான திருவாவடுதுறை மரபில் தோன்றிய எனது குருமூர்த்தமே!), நின் தனது நாமம் - தேவரீருடைய திருநாமம், விளம்பற்கு அரும் சோதி என்கோ - சொல்லுதற்கரிய (வாக்குக் கெட்டாத) சோதி (பிரகாசம்) என்று சொல்லவோ? (நிர்க்குணப் பிரமம்), விடையோன் என்கோ - இடபத்தமர்ந்தோன் என்னவோ? (சகுணப்பிரமம்), என் உளம்புக்க சிவப்பிரகாசன் என்கோ - அடியேனுடைய இருதயத்தில் புகுந்திருக்கின்ற (எனது குருமூர்த்தமான) சிவப்பிரகாசன் என்று நவிலவோ? என் அம் கைத்தலம் பற்றிய சாந்தன் என்கோ - அடியேனுடைய அழகிய கைத்தலத்திலிருக்கின்ற (எனதிஷ்ட தெய்வமான) சாந்தன் என்று கூறவோ? எனக்கு சொல்வாய் - (இந்த நான்கையும் அடியேன் வழிபடுகின்றமையால், இவற்றில் தேவரீர் எந்த நாமத்தை யுடையவர்? என்பதை) அடியேனுக் கருள்வீராக, (எ - று.) என்கோ என்பதில் கு சாரியை. ஓ என்னும் வினா யிடைச்சொல், ஐயப்பொருளை யுணர்த்திற்று. கைத்தல மென்றது, எதுகைநோக்கிக் கைத்தளம் என்று திரிந்தது. ஏகாரம் அசைநிலை. (49)

எனக்கிந்தினி யாண்டிடல் வேண்டுமெம் மீசனேமற்
றுனக்கே சரணஞ் சரணம் புலனோடு மென்றன்
மனக்கோதனைத்து மிறந்தோங்கறிவாகி யாங்கே
பிணக்காண் பவன்காட்சியு மற்றவபேத வாழ்வே.

(இ - ள்.) எம் ஈசனே - எமதிறைவனே! என் தன்புலனோடு மனக்கோது அனைத்தும் இறந்து ஓங்கு அறிவாகி - அடியேனுடைய இந்திரிய வுணர்ச்சியோடு மனதிலுள்ள (இராகத் துவேடாதி) குற்றங்கள் எல்லாம் அற்று பரமாத்மாவாகி (பிரத்யகபின்ன பிரமமாகச்

சேஷித்து), பினைக் காண்பவன் காட்சியும் அற்ற அபேத வாழ்வு - பின்னர் ஞாதுருஞானம் நீங்கிய (கேவலம் திருக்குசொரூபமான) அபேதவாழ்வே (திரிபுடிரகிதமான நிருவிகற்ப சமாதி), இனி என க்கு ஈந்து ஆண்டிடல் வேண்டும் - இனி அடியேனுக்கு அளித்து (பிறவிப் பெருங்கடலிலிருந்து) காப்பாற்றவேண்டும், உனக்கு சரணம் சரணம் - தேவரீருக்கு நமஸ்காரம் நமஸ்காரம், (எ - று.) மற்று, ஆங்கு, ஏகாரம், மூன்றும் அசைநிலைகள். (50)

திருச்சிற்றம்பலம்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

அறிவொரு வடிவா மருந்தவ னுரைத்த
அருமையாந் தோத்திரத்திற்கு
விறிதமிழ் தெரியாச் சிறியனே னுரையை
விளம்பினன் பெருமையை நாடி
அறிவிலோ ராற்றுங் குறைபல பொறுக்கு
மறிவுளோ ரிவ்வுரைபார்த்து
நெறியிலா வென்னை நகுவரோ பாலர்
பிழைகளு மமுத மீன்றவர்க்கே.

---

வைராக்கிய சதகம் தோத்திரமும் உரையும்
முற்றுப் பெற்றது.

---

திருச்சிற்றம்பலம்.

சர்வஞ் சின்மயம்.

ஸ்ரீலஸ்ரீ செல்லப்ப ஞான தேசிகர்
திருவடி வாழ்க !



## 26 வைராக்ய டிண்டிமம்

(டிண்டிமம் - பேரிகை)

காம :குரோதஶ்சலோபஶ்ச
தேஹேதிஷ்டந்திதஸ்கரா :
ஜ்ஞானரத்நாபஹாராய
தஸ்மாத்ஜாக்ரத ஜாக்ரத :

(இ - ள்) ஞானமென்கிற இரத்தினத்தைத் திருடும்பொருட்டு உடம்பின்கண் காமம், குரோதம், லோபமென்னும் மூன்று திருடர் களிருக்கிறார்கள். ஆகவேவிழித்திருங்கள்; விழித்திருங்கள். (எ- று)

காமாதி மூன்றும் உயிர்கள் முத்தியடைவதற்குத் தடையாயி ருக்கின்றனவென்பது கருத்து. (1)

ஜன்மதுக்கம்ஜராதுக்கம்
ஜாயாதுக்கம்புன : புன:
ஸம்ஸாரஸாகரம்துக்கம்
தஸ்மாத்ஜாக்ரதஜாக்ரத:

(இ - ள்.) பிறப்பிறப்பு மூப்பு மனைவி முதலியவற்றால் அடிக் கடி துக்கம். ஸம்ஸாரமென்கிற சமுத்திரம் துக்கமே வடிவமானது. ஆகவே விழித்திருங்கள்; விழித்திருங்கள். (எ - று.) (2)

மாதாநாஸ்தி பிதாநாஸ்தி
நாஸ்திபந்து ஸஹோதர:
அர்த்தம்நாஸ்தி கிருஹம்நாஸ்தி
தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரத:

(இ - ள்.) விசாரித்துப் பார்க்குமிடத்து தாய் தந்தையர்களு மில்லை; சகோதரர்களும், சுற்றத்தார்களும், செல்வமும், வீடும் இல்லை; எல்லாம் மித்தை: (பொய்) ஆகவே விழித்திருங்கள்; விழித் திருங்கள். (எ - று.) (3)

ஆஸ்யா பத்ததேலோகே
கர்மணுபஹு‍ சிந்தயா
ஆயுக்ஷீணம் நஜாநாதி
தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரத:

(இ - ள்.) இவ்வுலகில், உயிர்கள் ஆசையினுல் பந்தப்படுகிருர்கள். பலவிதமான சிந்தனைகளாலும், தொழில்களாலும் ஆயுள் போவதை அறிவதேயில்லை. ஆகவே விழித்திருங்கள்; விழித்திருங்கள். (எ - று.) (4)

வைராக்ய டிண்டிமம் முற்றிற்று.

---

கடோபநிஷத் 3-வதுவல்லி 14-ம் வாக்கியம்:—

" ஓ உயிர்களே ! எழுந்திருங்கள். அஞ்ஞானத்தூக்கத்தைவிட்டு விழித்துக்கொள்ளுங்கள். பிரஹ்ம நிஷ்டராகிய சிறந்த ஆசாரியரிடத்திற்குச் சென்று ஞானத்தைப் பெற்றுக்கொள்ளுங்கள். விவேகிகள், இந்த வழியைத் தீட்டப்பட்ட கத்திமுனையைப்போலச் செல்வதற்கரிதானதாய், நடப்பதற்குக் கடினமானதென்று உரைக்கின்றனர்.''

சுவேதாசுவதர உபநிஷத் 6-ம் அத்தியாயம் 11வது வாக்கியம்

"கடவுள் ஒருவர். எல்லாப்பூதங்களிலும் மறைந்திருப்பவர். யாவற்றிலும் நிறைந்திருப்பவர். எல்லாப் பூதங்களிலும் உள்ளேயிருப்பவர். சகல செய்கைகளுக்கும் தலைவர். எல்லாப் பூதங்களுக்கும் இருப்பிடமாக இருப்பவர். யாவற்றிற்கும் சாக்ஷியாக இருப்பவர். ஞானசொரூபி. சங்கர ரகிதர். படைக்கப்பட்ட பொருள்களுடைய பண்புகளற்றவர்.''

---



## 27. அர்ச்சனை நாமங்கள்

### 1. ஸ்ரீ விநாயகர் சோடச நாமங்கள்

1. ஓம் சுமுகாயநம:
2. ,, ஏகதந்தாயநம:
2. ,, கபிலாயநம:
4. ,, கஜகர்ணிகாயநம:
5. ,, லம்போதராயநம:
6. ,, விகடாயநம:
7. ,, விக்னராஜாயநம;
9. ,, கணுதிபதயேநம:
9. ஓம் தூமகேதுவேநம:
16. ,, கணுத்யக்ஷாயநம:
11. ,, பாலசந்த்ராயநம:
12. ,, கஜானனுயநம:
13. ,, வக்ரதுண்டாயநம:
14. ,, சூர்ப்பகர்ணுயநம:
15. ,, ஹேரம்பாயநம:
16. ,, ஸ்கந்தபூர்வஜாயநம:

ஓம் ஸ்ரீமத் அகண்டபரிபூரண சச்சிதானந்த அத்வைத ஜோதி லிங்கசொரூப ஸ்ரீ விக்ன விநாயக சுவாமினே நமோ நம:

ஓம் நாநாவித மந்த்ரபுஷ்பம் சர்வ உபசாரபூர்வம் சமர்ப்பயாமி.

முற்றிற்று.

---

### 2. ஸ்ரீ சுப்ரமண்யர் சோடச நாமங்கள்.

1. ஓம் ஸ்கந்தாயநம:
2. ,, குஹாயநம:
3. ,, ஷண்முகாயநம:
4. ,, பாலநேத்திரசுதாயநம:
5. ,, பிரபவேநம:
6. ,, பிங்களாயநம:
7. ,, கிருபாளவேநம:
8. ,, ஶிகிவாஹநாயநம:
9. ஓம் த்விஷட்புஜாயநம:
10. ,, திரிநேத்திராயநம:
11. ,, பக்தவத்ஸலாயநம:
12. ,, உமாசுதாயநம:
13. ,, கிரௌஞ்சதாரணுயநம:
14. ,, விஶாகாயநம:
15. ,, பார்வதீப்பிரியநந்தனுயநம:
16. ,, ஸர்வஸ்வாமினேநம:

ஓம் ஸ்ரீமத் அகண்டபரிபூரண சச்சிதானந்த அத்வைத ஜோதி லிங்கசொரூப ஸ்ரீ சிவ சுப்ரமண்யசுவாமினே நமோநம:

ஓம் நாநாவித மந்த்ரபுஷ்பம் சர்வ உபசாரபூர்வம் சமர்ப்பயாமி.

முற்றிற்று.

---

### 3. ஸ்ரீசிவ சோடச நாமங்கள்:

1. ஓம் சிவாயநம:
2. ,, மகேஸ்வராயநம:
3. ,, ஶம்பவேநம:
4. ,, பினாகினேநம:
5. ,, சசிசேகராயநம:
6. ,, வாமதேவாயநம:
7. ,, விரூபாக்ஷாயநம:
8. ,, கபர்த்தினேநம:
9. ஓம் நீலலோஹிதாயநம:
10. ,, ஶங்கராயநம:
11. ,, சூலபாணயேநம:
12. ,, கட்வாங்கினேநம:
13. ,, விஷ்ணுவல்லபாயநம:
14. ,, பாலநேத்திராயநம:
15. ,, அம்பிகாநாதாயநம:
16. ,, ஸ்ரீகண்டாயநம:

ஓம் ஸ்ரீமத் அகண்டபரிபூரண சச்சிதானந்த அத்வைத ஜோதி லிங்கசொரூப ஸ்ரீ சிவசுவாமினே நமோநம:

ஓம் நாநாவித மந்த்ரபுஷ்பம் சர்வ உபசாரபூர்வம் சமர்ப்பயாமி.

முற்றிற்று.

---

### 4. ஸ்ரீவிஷ்ணு சோடச நாமங்கள்.

1 ஓம் க்ருஷ்ணாயநம:
2 ,, கமலநாதாயநம:
3 ,, வாஸுதேவாயநம:
4 ,, ஸனாதனாயநம:
5 ,, அரயேநம:
6 ,, தேவகீநந்தனாயநம:
7 ,, ஸ்ரீஶாயநம:
8 ,, அனகாயநம:
9. ஓம் கோவிந்தாயநம:
10 ,, அனந்தாயநம;
11 ,, வனமாலினேநம:
12 ,, பீதவாஸஸேநம:
13 ,, கோபாலாயநம:
14 ,, ஸர்வபாலகாயநம:
15 ,, அஜாயநம:
16 ,, நிரஞ்சனாயநம:

ஓம் ஸ்ரீமத் அகண்டபரிபூரண சச்சிதாநந்த அத்வைத ஜோதி லிங்கசொரூப ஸ்ரீ விஷ்ணுவே நமோநம:

ஓம் நாநாவித மந்த்ரபுஷ்பம் சர்வ உபசாரபூர்வம் சமர்ப்பயாமி.

முற்றிற்று.

---



### 5. ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி சோடச நாமங்கள்

1 ஓம் தயாநிதயேநம:
2 ,, பஞ்சகோசவிலக்ஷணாயநம:
3 ,, அநந்தாயாநம:
4 ,, அஜாயநம:
5 ,, அசிந்த்யாயநம:
6 ,, நிரஞ்சனாயநம:
7 ,, நித்யானந்தாயநம:
8 ,, அக்ஷராயநம:
9 ஓம் உதாசீனாயநம:
10 ,, அமலாய நம:
11 ,, நிஷ்களாயநம:
12 ,, தாரகாயநம:
13 ,, நித்யசுத்தாயநம:
14 ,, நித்யமுக்தாயநம:
15 ,, பராயநம:
16 ,, ஸர்வலோககுருவேநம:

ஓம் ஸ்ரீமத் அகண்டபரிபூரண சச்சிதானந்த அத்வைத ஜோதி லிங்கசொரூப ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி சுவாமினே நமோநம:

ஓம் நாநாவித மந்த்ரபுஷ்பம் சர்வ உபசாரபூர்வம் சமர்ப்பயாமி.

முற்றிற்று.

---

### 6. ஸ்ரீசங்கர பகவத்பாதசாரிய சுவாமிகள்

#### சோடச நாமங்கள்

1 ஓம் சங்கராசாரியவர்யாயநம:
2 ,, பிரஹ்மானந்தப்ரதாயகாயநம:
3 ,, ஸாந்தாய நம:
4 ,, நித்யத்ருப்தாயநம:
5 ,, மஹதேநம:
6 ,, முநயேநம:
7 ,, நித்யானந்தாயநம:
8 ,, நிராதங்காயநம:
9. ஓம் நிஸ்ஸங்காயநம:
10 ,, நிர்மலாத்மகாயநம:
11 ,, நிர்மமாயநம:
12 ,, நிரஹங்காராயநம:
13 ,, அனகாயநம:
14 ,, ஸுதியேநம:
15 ,, வாகீஶாயநம:
16 ,, ஜகத்குரவேநம:

ஓம் ஸ்ரீமத் அகண்டபரிபூரண சச்சிதானந்த அத்வைத ஜோதி லிங்கசொரூப ஸ்ரீ சங்கரபகவத் பாதாசாரியசுவாமினே நமோநம:

ஓம் நாநாவித மந்த்ரபுஷ்பம் சர்வ உபசாரபூர்வம் சமர்ப்பயாமி.

முற்றிற்று.

---

## 7. ஸ்ரீ சொரூப சோடச நாமங்கள்.

1 ஓம் அகண்டாய நம:
2 ,, அகர்த்தரே நம:
3 ,, அகாமாய நம:
4 ,, அகாரணுய நம:
5 ,, அஹேயாய நம:
6 ,, அக்ரோதாய நம:
7 ,, அஸங்காய நம:
8 ,, அஸம்ஸாரிணே நம:
9 ஓம் அசரீரிணே நம:
10 ,, அசலாய நம:
11 ,, அச்சுதாய நம:
12 ,, அக்ஷராய நம:
13 ,, அணவே நம:
14 ,, அத்வையாய நம:
15 ,, அநந்தாய நம:
16 ,, அநாதயே நம:

ஓம் ஸ்ரீமத் அகண்டபரிபூரண சச்சிதானந்த அத்வைத ஜோதி லிங்க சொரூப ஸ்ரீ.........நமோ நம :

ஓம் நாநாவித மந்த்ரபுஷ்பம் சர்வ உபசாரபூர்வம் சமர்ப்பயாமி.

முற்றிற்று.

---

## 8. அம்பிகை சோடச நாமங்கள்.

1 ஓம் சிவசத்தியே நம:
2 ,, சிவசங்கரியே நம:
3 ,, இச்சாசத்தியே நம:
4 ,, கிரியாசத்தியே நம:
5 ,, ஞானசத்தியே நம:
6 ,, சிவமாயாயே நம:
7 ,, சிவப்ரியாயே நம:
8 ,, சுந்தரியே நம:
9 ஓம் சௌம்மியாயே நம:
10 ,, பராபராயே நம:
11 ,, பாலாயே நம:
12 ,, த்ரிப்புராயே நம:
13 ,, சுதந்தரியே நம:
14 ,, பவானியே நம:
15 ,, புவனேஸ்வரியே நம:
16 ,, மகேசுவரியே நம:

ஓம் ஸ்ரீமத் அகண்டபரிபூரண சச்சிதானந்த அத்வைத ஜோதி லிங்கசொரூப ஸ்ரீ அம்பிகையே நமோநம :

ஓம் நாநாவித மந்த்ரபுஷ்பம் சர்வ உபசாரபூர்வம் சமர்ப்பயாமி.

முற்றிற்று.

---



## 9. சரஸ்வதி சோடச நாமங்கள்.

1 ஓம் ஸரஸ்வதியே நம:
2 ,, மஹாபத்ராயே நம:
3 ,, மஹாமாயாயே நம:
4 ,, வரப்ரதாயே நம:
5 ,, ஸ்ரீப்ரதாயே நம:
6 ,, பத்ம நிலயாயே நம:
7 ,, பத்மாக்ஷியே நம:
8 ,, பத்மவக்த்ராயே நம:
9 ஓம் சிவானுஜாயே நம:
10 ,, புஸ்தகஹஸ்தாயே நம:
11 ,, ரமாயே நம:
12 ,, காமரூபிண்யே நம:
13 ,, மஹாவித்யாயே நம:
14 ,, மாலின்யே நம:
15 ,, ஸுரவந்திதாயே நம:
16 ,, விமலாயே நம:

ஓம் ஸ்ரீமத் அகண்டபரிபூரண சச்சிதானந்த அத்வைத ஜோதி லிங்கசொரூப ஸ்ரீ ஸரஸ்வதிதேவியே நமோ நம:

ஓம் நாநாவித மந்த்ரபுஷ்பம் சர்வ உபசாரபூர்வம் சமர்ப்பயாமி.

முற்றிற்று.

---

## 10. இலக்குமி சோடச நாமங்கள்.

1 ஓம் மகாலக்ஷ்மியே நம:
2 ,, விஷ்ணுவல்லபாயே நம:
3 ,, ஸுமுகியே நம:
4 ,, சிவசத்தியே நம:
5 ,, பராசத்தியே நம:
6 ,, பராத்பராயே நம:
7 ,, நித்தியாயே நம:
8 ,, மகாதேவியே நம:
9 ஓம் மகாமாயையே நம:
10 ,, ஸர்வமோகின்யே நம:
11 ,, துர்க்காயே நம:
12 ,, காமாக்ஷியே நம:
13 ,, மீனாக்ஷியே நம:
14 ,, கல்லியாணியே நம:
15 ,, மங்கலப்ரதாயே நம:
16 ,, சித்சொரூபிணியே நம:

ஓம் ஸ்ரீமத் அகண்டபரிபூரண சச்சிதானந்த அத்வைத ஜோதி லிங்கசொரூப ஸ்ரீ மகாலக்ஷ்மியே நமோ நம:

ஓம் நாநாவித மந்த்ரபுஷ்பம் சர்வ உபசாரபூர்வம் சமர்ப்பயாமி.

முற்றிற்று.

---

அர்ச்சனை நாமங்கள் முற்றிற்று.

## 28. வாழ்த்து.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல்லா மரனுமமே
சூழ்க வையகமுந் துயர் தீர்கவே. 1.

மல்குக வேதவேள்வி வழங்குக சுரந்துவானம்
பல்குக வளங்களெங்கும் பரவுக வறங்களின்ப
நல்குக வுயிர்கட்கெல்லா நான்மறைச் சைவமோங்கிப்
புல்குக வுலகமெல்லாம் புரவலன் செங்கோல்வாழ்க. 2.

வாழ்க வெங்குரு வானோர் வணங்கவே
வாழ்க மெய்யடியார்கள் படிமிசை
வாழ்க கொற்றவா ளீசருமையொடும்
வாழ்க கோவிலூர் வாழ்க வாழ்கவே. 3.

திருச்சிற்றம்பலம்.

வாழ்த்து முற்றிற்று.

---




தோத்திர மஞ்சரி முற்றுப்பெற்றது.

ஓம் தத் சத்.

பிரம்மணே நம :

சுபம் ! சுபம் !! சுபம் !!!

---

Printed at the B. N. Press, Mount Road, Madras.

### ஜீவகாருண்யம்

தன்னுயிர் நீப்பினும் செய்யற்க ; தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

### கடவுள் பக்தி

கற்றதனா லாய பயனென்கொல் ? வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்.

### வைராக்கியம்

தவம்செய்வார் தங்கருமம் செய்வார் ; மற்றல்லார்
அவம் செய்வார் ஆசையுள் பட்டு.

### ஞானம்

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு.

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

---